4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண் எம். 8798

∴ மக்களின் ஜனநாயகத்தை உருவாக்க
∴ உழைப்பாளியின் கலங்கரை விளக்காக நல் வாழ்வுப் போராட்டத்தின் வழிகாட்டியாகத் திகழும்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
9-வது கட்சி காங்கிரஸ் (மாநாடு)

28-12-71 முதல் 2-1-72 வரை
மதுரை மாநகரில் கூடுகிறது
மாநாடு சீரும் சிறப்புற நடைபெற
நிதி தாரீர்

—மாநிலக் குழு.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் -ஏ9) (மதுரை 18—11—71 வியாழன் (மலர் 77

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
தமிழ் மாநில 9-வது மாநாடு

★ உழைக்கும் மக்களின் உரிமைகளைக் காக்க
★ தமிழகத் தொழிலாளி வர்க்கத்தின் போராட்டப் பாதையை வகுக்க

1971, நவம்பர் 25 முதல் 28 வரை
சேலம் மாநகரில் சிறப்பாகக் கூடுகிறது.

# சிறுநாடுகளுக்கு எதிரான சதிகளை முறியடிப்போம்

## இனம் இனத்தோடு... வெள்ளாடு தன்னோடு!




சிம்சன் போராட்டத்திலும், சென்னை ரப்பர்பாக்டரி, திருச்சி பாயிலர் தொழிற்சாலை, சங்ககிரி சிமெண்ட் ஆலை-போன்ற பல தொழிற்சாலைகளில் நடைபெற்ற போராட்டங்களிலும் சி ஐ. டி யூ. சங்கத்துடனும் மற்ற சங்கங்களுடனும் தி. மு. க. சங்கத் தொழிலாளர்கள் ஒன்றுபட்ட போராட்டத்தில் இணைந்துள்ளனர். இதனால், தி. மு. க. தலைமை கலக்கம் அடைந்துள்ளது. தொழிலாளர் ஒற்றுமைக்கு விரோதமாகப் பேசிவருகின்றது. ...செய்தி

# சிம்சன் தொழிலாளர்க்கு ஆதரவாக மதுரையில் ஆர்ப்பாட்ட ஊர்வலம்

## கூட்டத்தில் போலீஸ் லாரியைவிட முயற்சி!

மதுரை, நவ. 16—

சென்னை சிம்சன் தொழிலாளர்களுக்கு ஆதரவாக மதுரையில் ஊர்வலமும், ஆர்ப்பாட்டமும் நடைபெற்றது. சி. ஐ. டி. யூ. மற்றும் பல்வேறு தொழிற்சங்கங்களைச் சேர்ந்த தொழிலாளர்களும் தலைவர்களும் கலந்து கொண்டனர்.

சென்னையில் உள்ள சிம்சன் கம்பெனியில் தி. மு. க. சங்கத் தலைவர் காட்டூர் கோபால் நிர்வாகத்துடன் செய்துகொண்ட தொழிலாளர் துரோக ஒப்பந்தத்தை எதிர்த்து அந்தக் கம்பெனித் தொழிலாளர்கள் அனைவரும் ஒன்றுபட்டுப் போராடியதும், அவர்களின் மீது தாக்குதலும், கைதும் செய்யப்பட்டதும் அறிந்ததே!

ஊர்வலம்

ஏராளமானோர் சைக்கிள்களில் கலந்து கொண்டனர்.

அந்த தொழிலாளர்களுக்கு தங்களது சகோதர ஆதரவை தெரிவிக்கும் முறையில் இன்று பகல் 4 மணிக்கு அனைத்துச் சங்கங்கள் சார்பில் ஊர்வலம் மதுரையில் நடைபெற்றது. மதிய பஸ் ஸ்டாண்டு அருகில் உள்ள கட்டபொம்மன் சிலையிலிருந்து ஊர்வலம் புறப்பட்டது இதில் இந்தியத்தொழிற் சங்க மையம் (சி.ஐ.டி.யூ.), ஐ.என்.டி.யூ.சி., எச்.எம்.எஸ். ஏ.ஐ.டி.யூ.சி. ஆகிய தொழிற்சங்கங்களின் தலைவர்களும் தொழிலாளர்களும் தத்தம் கொடிகளுடன் கலந்து கொண்டனர்.

வழக்குகளை வாபஸ்வாங்குக!

“உரிமைக்குப் போராடும் சிம்சன் தொழிலாளர் போராட்டம் வாழ்க! காட்டூர் கோபாலின் துரோக ஒப்பந்தத்தை வாபஸ் வாங்கு! தி.மு.க. ஆட்சியின் போலீஸ் அடக்குமுறை ஒழிக! தலைவர்கள்

தொழிலாளர்கள் மீது போடப்பட்டுள்ள வழக்குகளை வாபஸ் வாங்கு!

தொழிலாளர் ஒற்றுமை ஓங்குக!”

போன்ற முழக்கங்களை எழுப்பிக்கொண்டு ஊர்வலம் திண்டுக்கல்ரோடு மேலமாசி வீதி, வடக்குமாசி வீதி, கல்பாலம்வழியாக கலெக்டர் அலுவலகம் அடைந்து அங்குஆர்ப்பாட்டம் நடந்தது.

சி. ஐ. டி. யூ. சார்பில் தோழர்கள் வி. கார்மேகம், எஸ். மன்னர்சாமி, வி. வாழவந்தான், எம். ராஜாங்கம், ஆகியோரும், எச். எம். எஸ். சார்பில் திரு. ராமய்யா, திரு. சுப்பிரமணியம் ஆகியோரும் ஐ என். டி. யூ. சி. சார்பில் திரு ராகவன், திரு. சுப்பையா ஆகியோரும், ஏ. ஐ. டி. யூ. சி. சார்பில் திரு ராமமூர்த்தி, திரு ஆண்டி ஆகியோரும் சென்று கலெக்டரைச் சந்தித்து மனுக் கொடுத்து, அரசு உடனடியாக தலையிட்டு சிம்சன் தொழிலாளர் பிரச்னையில் தேவையான நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்று வற்புறுத்தினர்.

கலெக்டர் மனுவை சென்னைக்கு அனுப்பிவைப்பதாகக் கூறினார்.

போலீஸ் கெடுபிடி

ஊர்வலம் கலெக்டர்ஆபீசை அடைந்தவுடன் கலெக்டர் அலுவலகத்தினுள் நுழைய விடாமல் தடுத்தனர். அத்துடன் ஊர்வலத்தின் மத்தியில் போலீஸ் லாரியைவிட முயற்சித்தனர். ஊர்வலத்தினர் லாரியைவிட மறுத்தனர். உடனே போலீஸ் சார்ஜண்ட் ஒருவர் ஊர்வலத்தினரை மிரட்டி, ஒரு போலீஸ்காரரிடம் “கண்ணீர்ப் புகைக் குண்டு எடுத்து வா” என்று ஆணையிடவே, மேலும் தொழிலாளரிடம் ஆத்திரம் வந்தது ஒரே அமளியாயிற்று” உடனே தலைவர்கள் தலையிட்டு அமைதி ஏற்படுத்தினர்.

# அமெரிக்க ஆக்ரமிப்பு துருப்புகள் வெளியேற வேண்டும்!

## ஐ. நா. வில் மக்கள் சீனத்தின் கொள்கை முழக்கம்

நியூயார்க் நவ 17—

மக்கள் சீனத்தின் முதல் கொள்கை முழக்கம் நேற்று ஐ. நா. சபையில் 22 ஆண்டுகளுக்குப் பிறகு கம்பீரமாக ஒலித்தது. அதிலே ஒடுக்கப்பட்ட அடக்கப்பட்ட சகல நாடுகளின் குரல் கேட்டது

மக்கள் சீனம் ஐ. நா. வில் பங்குகொள்வதற்கு வந்துள்ளதை இந்தியா உள்ளிட்டு 55 நாடுகள் உளமகிழ்ந்து வரவேற்றன. உணர்ச்சி மிகுந்த இந்த வரவேற்புக்குப் பதில் கூறுமுகத்தான், மக்கள் சீனத்தின் உதவி முதலமைச்சரும் ஐ. நா. வில் சீனப் பிரதிநிதித்துவக் குழுவின் தலைவருமான சியோ- குவான்- ஹூவா தன்னுடைய முதல் பேருரையை நிகழ்த்தினர்.

‘பின்தங்கிய நிலையிலுள்ள வளர்ச்சியடைந்துவரும் நிலையிலுள்ள மிகப்பெரும்பான்மையாக உள்ள ஆசிய-ஆப்பிரிக்க லத்தீன் அமெரிக்க நாடுகளில் ஒன்றுதான் சீனா இத்தகைய நிலையிலுள்ள மக்கள் சீனம் பெரும் வல்லரசு நடந்து சிறிய நாடுகளின் மீது ஆதிக்கம் செலுத்தவும் வல்லரசு ஆதிக்க அரசியலில் மக்கள் சீனம் ஒரு நாளும் ஈடுபடாது” என்று சீனப் பிரதி கியோ பிரகடனம் செய்தார்.

‘உலக விவகாரங்கள் அனைத்தையும் இந்த உலகிலுள்ள எல்லா நாடுகளாலும் நிருவாகிக்கப்பட வேண்டும். எல்லா நாடுகளும் கூட்டாகச் சேர்ந்துநின்று உலகப்பிரச்சனைகளைத் தீர்க்கவேண்டுமே யல்லாது ஒரு சில வல்லரசுகள் சேர்ந்துகொண்டு ஆதிக்கம் செலுத்தவோ, அவர்களது முடிவை மற்றவர்கள் மீது திணிப்பதற்கோ, அனுமதிக்கக்கூடாது என்றார்.

புரட்சி என்பதுவரலாற்றின் தவிர்க்க முடியாத ஒரு போக்காக இன்று வந்துவிட்டது.

வளர்ச்சியடைந்த நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் மக்கள் சீனம். பின்தங்கிய நிலையில் தானிருக்கிறது. இக்காரணத்தால் வளர்ச்சியடைந்துவரும் நாடுகளுக்கு, சீனா அதிகமான உதவி அளிக்கமுடியாத நிலையில் உள்ளது. இந்த நிலையில் சீனநாடு பிறநாடுகளுக்கு உதவிசெய்ய முன்வருவதும், திட்டவட்டமானதொரு கொள்கையின் அடிப்படையில் தான் உதவியைப் பெற்றுக் கொள்ளும் ஒவ்வொரு நாட்டின் சுதந்திர உரிமைக்கு எத்தகைய பாதகமும் ஏற்படாத வகையில் எத்தகைய நிபந்தனையும் விதிக்காமல் மக்கள் சீனம் உதவி அளித்து வருகிறது.

ஒரு நாடு மற்றொரு நாட்டின படையெடுப்பின் காரணமாக ஆக்கிரமிப்பிற்கு ஆளானால்தான் மக்கள் சீனம் ஆக்கிரமிப்பிற்குள்ளான நாட்டிற்கு ராணுவதளவாட உதவிசெய்ய முன்வருகிறது ஆனால் ராணுவ தளவாடங்களை நாங்கள் வியாபார நோக்கத்துடன் உற்பத்தி செய்து விற்பனை செய்யும் வியாபாரிகளாக நாங்கள் (மக்கள் சீனம்) ஒரு நாளும் மாறமாட்டோம்.

“அதே சமயத்தில் உதவி செய்வதாகக் கூறிக்கொண்டு அதைப் பயன்படுத்தி, ஏனைய நாடுகளில் ஆதிக்கம்புரியும் இழிச்செயலிலோ ஏனைய நாடுகளைக் கொள்ளையடிக்கும் அடாத வழியிலோ நாங்கள் ஒருநாளும் அடி எடுத்து வைக்க மாட்டோம் என்று மக்கள் சீனத்தின் பிரதிநிதி கியோ அவர்கள் முழங்கினர்.

அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் அயோக்கியத்தனமான செயல்களை அம்பலப்படுத்தி அவர் பேசுகையில் குறிப்பிட்டதாவது :-

சீனத்தின் ஒரு பகுதியான தைவானை சியாங்-கே-சேக்குக்கு முட்டுக் கொடுத்துக் கொண்டிருக்கும், அமெரிக்காவின் இன்றைய ஆக்கிரமிப்பு போக்குக்கு ஒரு முடிவுகண்டு தைவானை விடுதலை செய்வதில் நாங்கள் உறுதியுடனே இருக்கின்றோம். அமெரிக்க அரசாங்கம் தன்னுடைய துருப்புகளை சீனத்தின் ஒரு பகுதியான தைவானிலிருந்து வாபஸ் வாங்கிக்கொண்டு உடனே வெளியேற வேண்டும் என்று இந்த மன்றத்தில் நின்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

அதேபோல் தென் கொரியாவிலிருந்து அமெரிக்கத் துருப்புகள் வாபசாகி வெளியேற வேண்டும். கொரிய நாடு ஒற்றுமைப்பட அது ஒன்றுதான் வழி.

மத்திய கிழக்கு ஆசியாவில் (அரேபிய நாடுகளில்) நடக்கும் விடுதலைப் போராட்டத்தை மக்கள் சீனம் முழுமனதுடன் ஆதரிக்கிறது. பாலஸ்தீன மக்களின் விடுதலைப் போராட்டத்தை ஆதரிக்கும். அரேபிய மக்களுக்குத் தெரியாமல் அவர்கள் முதுகுக்குப் பின்னால் அவர்களுக்கு எதிரான எத்தகைய துரோக ஒப்பந்தத்தையும் செய்து, அதை அவர்கள் மீது திணிக்க யாருக்கும் உரிமையில்லை என்று சீனப் பிரதிநிதி விளக்கினர்.

ஆப்பிரிக்க நாடுகளைப்பற்றி குறிப்பிடும்போது, காலனி ஆதிக்கத்தையும் ஏகாதிபத்திய

(4-ம் பக்கம் பார்க்க)

## இன்று மதுரை செல்லூரில் பொதுக்கூட்டம்

18-11-71 மாலை 7 மணிக்கு செல்லூர் மொட்டையன் கோவில் முன்பாக, கட்சிப் பொதுக்கூட்டம் நடைபெறும். 9-வது கட்சிக் காங்கிரஸும் இன்றைய அரசியல்நிலைமையும் கைத்தறி நெசவாளர்பிரச்சனை பற்றியும் தோழர் என். சங்கரய்யா பேசுவார்.

# மதுரை அமெரிக்கன் கல்லூரி மூடப்பட்டது

## கலெக்டரின் சமரசமுயற்சி தோல்வி

### தேர்தல் நடத்த முதல்வர் மறுப்பு!

மதுரை, நவ. 17—

மதுரை அமெரிக்கன் கல்லூரி இன்று முதல் காலவரையறையின்றி மூடப்பட்டதாக அறிவிக்கப்பட்டது.

இங்குள்ள அமெரிக்கன் கல்லூரி மாணவர்கள், கல்லூரிப் பேரவை, விடுதிச் செயலர்கள் தேர்தல்களை நடத்த வேண்டும், விடுதிக்கான பருவ (டேர்ம்) வாடகையைக் குறைக்க வேண்டும்; மாணவர்களைப் பழிவாங்கும் ஒழுங்குக் கமிட்டியை உடனடியாக உடனடிய ரத்து செய்ய வேண்டும்; மாணவர்களிடமிருந்து அபராதம் வாங்குவதை உடனே கைவிட வேண்டும்; தமிழ்ப் பயிற்சி மாணவர்களுக்கு அரசு ஊக்கத் தொகையை உடனடியாகக் கொடுக்க வேண்டும். ஆகிய கோரிக்கைகள் உட்பட மொத்தம் 11 கோரிக்கைகளுக்காக நேற்று (நவ 16) காலை மாணவர்கள் அனைவரும் வேலை நிறுத்தத்தில் இறங்கினர். கல்லூரிக்குள் தங்கள் கோரிக்கைகளை முழங்கிக் கொண்டு ஊர்வலம் வந்தனர். உடனே போலீசார் அதிக அளவில் வந்துவிட்டனர்.

பின்னர் மாணவர்கள் அனைவரும் ஊர்வலமாக பல்கலைக்கழகம் சென்று பதிவாளரைச் சந்தித்தனர். அங்கு மாவட்ட ஆட்சித் தலைவர் (கலெக்டர்) தொலைபேசி மூலம் தான் வந்து சமரசம் செய்வதாகக் கூறிய தன் அடிப்படையில் மாணவர்கள் மீண்டும் கல்லூரிக்கு வந்து முதல்வர் அறை முன் கூடி இருந்தனர்.

கலெக்டர் திரு லெட்சுமிகாந்தன் பாரதி மாவட்டப் போலீஸ் அதிகாரி ஆகியோர், முதல்வர் மாணவர் பிரதிநிதிகள் 20 பேர்களுடன் கூட்டாக பேச்சு வார்த்தை நடத்தினர் இந்தப் பேச்சு வார்த்தையில் கோரிக்கைகளை ஏற்றுக் கொள்ள கல்லூரி முதல்வர் மறுக்கவே சமரசப் பேச்சு வார்த்தை முறிவு ஏற்பட்டது.

இதனால், ஆத்திரமடைந்த மாணவர்கள் தங்களது கோரிக்கைகளை வலியுறுத்தி முழக்கமிட்டனர் தங்களது கோரிக்கை நிறைவேறும் வரை தொடர்ந்து வேலை நிறுத்தம் செய்வது என்று மாணவர்கள் முடிவு செய்தனர்.

இதனால் கல்லூரி நிர்வாகம் கல்லூரியைக் காலவரையின்றி மூடப்படுவதாக அறிவித்துள்ளது. விடுதி மாணவர்களை வெளியேறும்படி ஆணையிட்டுள்ளது. இத்தகைய நடவடிக்கைகளை நிர்வாகம் மேற்கொண்ட போதிலும் மீண்டும் கல்லூரி திறந்தவுடன் மீண்டும் மீண்டும் போராடுவோம் என்று மாணவர்கள் கூறினார்கள்.

—ந. நி.

# டில்லி காங்கிரஸ் அலுவலக கட்டிடம் சீல் வைக்கப்பட்டது!

## நீதிமன்ற நடவடிக்கை

புதுடில்லி, நவ. 18—

புதுடில்லி ஜந்தர்மந்தர் ரோடிலுள்ள காங்கிரஸ் அலுவலகக் கட்டிடத்தை சப்டிவிஷனல் மாஜிஸ்டிரேட் உத்திரவின் பேரில் போலீஸ் பூட்டி சீல்வைத்து விட்டது.

ஆளும் காங்கிரஸ் கட்சியும் சிண்டிகேட் காங்கிரசும் இந்தக் கட்டிடத்துக்குச் சொந்தம் கொண்டாடி தகராறு மூண்டதாகப் போலீசிடமிருந்து தகவல் வந்ததின் பேரில் நீதிமன்றம் இந்த நடவடிக்கையை எடுத்தது.

இக்கட்டிடத்தில் அறை அறையாகப் பூட்டிச் சீல் வைப்பதற்குப் போலீசுக்கு 3-மணி நேரம் பிடித்தது.

இந்திரா காங்கிரஸ் காரர்கள் இக்கட்டிடத்தைப் பலாத்காரமாகப் பிடித்திருப்பதை எதிர்த்து சிண்டிகேட் காங்கிரஸ் தலைவர் சாதிக்அலி உண்ணாவிரதம் இருந்து வருகிறார். இதற்குப் போட்டியாக இந்திரா காங்கிரஸ் காரர்கள் “தராணா” (உட்கார்ந்து மறியல் செய்வது) செய்து வருகிறார்கள் “சிண்டிகேட் காரர்களும் “தராணா” செய்கிறார்கள். கட்டிடத்தின்குடியிருப்புப் பகுதியில் நடைபெறுவதால் சாதிக்அலியின் உண்ணாவிரதமும்' இந்திராகாங்கிரஸ் காரர்களும், சிண்டிகேட் காங்கிரஸ் காரர்களும் மேற்கொண்டிருக்கும் தராணாவும் கட்டிடத்துக்குச் சீல் வைக்கும் நடவடிக்கையால் பாதிக்கப்படவில்லை.

காரைக் காணவில்லை

இதற்கிடையே சிண்டிகேட்டைச் சேர்ந்த மனுபாய் படேல் ஜந்தர்மந்தர்ரோடு கட்டிடத்திலிருந்துதம்முடைய காரையாரோசிருடிக்கொண்டு போய் விட்டதாக அறிவிக்கப் படுகிறது.

உண்ணாவிரதம் நின்றது

சிண்டிகேட் தலைவர் சாதிக் அலி நவ. 16-ம் தேதி மாலையில் உண்ணாவிரதத்தை நிறுத்தினார்.

## நாடாளுமன்றத்தில்

# விலைவாசி உயர்வுக்கு கடும் எதிர்ப்பு

புதுடில்லி, நவ. 16—

விலைவாசி உயர்வுக்கு வழி வகுத்துள்ள அரசாங்கக் கொள்கை மீது நாடாளுமன்றத்தில் இன்று எதிர்கட்சி உறுப்பினர்கள் கடுமையான தாக்குதல் கொடுத்தனர்.

வரவு செலவுத் திட்டத்தைச் சமர்ப்பித்தபோது விலைகள் சிறிதுதான் உயரும் என்று அரசாங்கத்திடமிருந்து வாக்குறுதி யளிக்கப்பட்டது. ஆனால் விலைகள் விஷம்போல் ஏறிக் கொண்டிருப்பதை அரசாங்கமே ஒப்புக் கொண்டுள்ளது என்பதை அவர்கள் சுட்டிக் காட்டினர்.

கடந்த 6 மாதங்களில் பருப்பு வகைகள் 23 சதவிகிதம் உயர்ந்திருப்பதை சிறிதளவு விலையேற்றம் என்று கூற முடியாதுஎன்று வாஜ்பாய் கூறினார்.

அரசாங்கம் தயாரிக்கும் விலைக் குறியீட்டெண் சரியானதல்ல என்று இந்திரஜித்குப்தா கூறினார்.

இவ்வாண்டு மே கடைசியிலிருந்து அக்டோபர் கடைசி வரை மொத்த விலைகள் 4 1 சதவிகிதம் உயர்ந்திருப்பதாக நிதித்துறை அமைச்சர் திரு. கே. ஆர். கணேஷ் விளாதத்துக்கு பதிலளிக்கையில் கூறினார் உபயோகிப்போர் விலைவாசிக் குறியீட்டெண் கடந்த மே மாதத்தில் 224 புள்ளியிலிருந்து செப்டம்பரில் 238 ஆக உயர்ந்திருப்பதாகவும் அவர் கூறினார்.

சென்றவருடத்தை ஒப்பிடும் போது மொத்தவிலைக்குறியீட்டெண் 4·6சதவிகிதஉயர்வைக் காட்டுகிறதென்றும் அவர் கூறினார். சர்க்கரை விலை உயர்ந்ததற்கு 1971-72ம் ஆண்டில் உற்பத்தி குறையும் என்று எதிர்பார்க்கப்பட்டு விலை ஏற்றப்பட்டிருப்பதாக அமைச்சர் ஒப்புக்கொண்டார்.

தேவைக்கேற்ற அளவில் பருப்பு வகைகள் உற்பத்தியாகவில்லை என்றும் எண்ணெய் வித்துகளும், எண்ணெயும் விலை உயர்ந்தாலும் இது சென்ற வருடம்போல அதிகமாக உயரவில்லை என்றும் அமைச்சர் கூறினார்.

விலைவாசி உயர்வைத் தடுக்கும் நடவடிக்கையாக வர்த்தகச் சூதாட்ட நடவடிக்கைகளுக்குக் கடன் கிடைப்பதைக் கட்டுப்பாடு செய்யப்போவதாக நிதி அமைச்சர் ஒய். பி. சவான் வழக்கம்போல் வாக்குறுதியளிக்கத் தவறவில்லை.

# தீக்கதிர்

## மாணவர் போராட்டம்

கல்லூரி கல்லூரியாக தமிழ்நாடெங்கும் மாணவர் போராட்டம் பரவிவருகிறது. மாணவர்களுக்கு அடிப்படை ஜனநாயக உரிமைகளை வழங்குவதற்கு தமிழக அரசு மறுப்பதன் காரணமாகவே இந்தப் போராட்டம் மூண்டுள்ளது. நம் நாட்டின் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தில் மாணவர் சமுதாயம் பெருமைமிக்கப் பாத்திரம் வகித்துள்ளது. சுதந்திர இந்தியாவிலும் காங்கிரஸ் கொடுங்கோன்மையை எதிர்த்து நடைபெற்ற போராட்டங்களில் மாணவர்கள் முன்னிலையில் நின்றுள்ளனர்.

தமிழக முதலமைச்சர் திரு கருணாநிதியோ இத்தகைய போராட்ட பாரம்பரியம் படைத்த மாணவர்களுக்கு அரசியலே கூடாது என்கிறார். இந்தக் கண்ணோட்டத்தில் கல்லூரிகளில் மாணவர் பேரவை அமைப்பதற்குக்கூட அனுமதி மறுக்கப்படுகிறது.

மாணவர் பேரவை அமைக்க அனுமதித்தால் மாணவர்களின் நியாயமான கோரிக்கைகளின் மீதும் நாட்டின் முன்னுள்ள பிரச்னைகளின் மீதும் மாணவர்கள் போராட்டம் எழ இடமேற்படும் என்று அஞ்சப்படுகிறது.

அண்டை மாநிலமான கேரளத்திலும் மேற்கு வங்கத்திலும் பல்கலைக்கழக நிர்வாகத்தில் பங்குபெறும் முறையில் செனட் அமைப்பில் பிரதிநிதித்துவம் பெறும் உரிமையைக் கூட மாணவர்கள் போராடிப் பெற்றுள்ளனர்.

தமிழ்நாட்டிலோ கல்லூரிகளில் மாணவர்பேரவைகளை அமைப்பதற்குக்கூட கடுமையான போராட்டம் நடத்த வேண்டியிருக்கிறது.

பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரியில் மாணவர் பேரவை வேண்டும் என்று கோரியதற்காக கல்லூரிக்குள் போலீஸ் புக அனுமதிக்கப்பட்டு இரத்தம் சொட்டச் சொட்ட மாணவர்கள் அடிக்கப்பட்டிருக்கின்றனர்.

1967-ல் காங்கிரஸ் எதிர்ப்புப் போராட்டத்தில் மாணவர்கள் முன்னின்றதைப் பயன்படுத்திக்கொண்டு ஆட்சிபீடம் ஏறிய தி. மு. க. தலைவர்கள் இப்போது கல்லூரி மாணவர்கள் பேரவை அமைத்தால்கூட தங்களுக்கு ஆபத்தாக மாறிவிடுமோ என்று அஞ்சுகின்றனர்.

தி. மு. க. அரசின் இந்த அச்சத்தின் காரணமாகத்தான் பாளையங்கோட்டையைத் தொடர்ந்து மதுரையிலும், உத்தமபாளையத்திலும் திண்டுக்கல்லிலும் நாகர்கோவிலிலும் சென்னையிலும் மற்ற இடங்களிலும் மாணவர்கள் போராடும் நிலை இன்று உருவாகியுள்ளது.

மாணவர் பேரவை அமைக்கவேண்டும் என்ற கோரிக்கைக்கும், தமிழ் போதனமொழித் திட்டத்துக்கு ஊக்கத் தொகைபோன்ற மற்ற கோரிக்கைகளுக்காகவும் மாணவர்கள் போராடும் நிலை உருவாகியிருப்பதற்குத் தமிழக அரசே பொறுப்பாகும். இந்தப் போராட்டத்தை பாளையங்கோட்டையில் மட்டுமின்றி மதுரை போன்ற மற்ற இடங்களிலும் போலீசைக் காட்டி மிரட்ட நிர்வாகங்கள் முற்பட்டிருக்கும் போக்கை வன்மையாகக் கண்டிக்கிறோம்.

இன்று அரசியல் தலைவர்களாக இருப்பவர்களில் பலர் மாணவப் பருவத்திலேயே அரசியலில் ஈடுபட்டவர்கள்தான். இன்று உலகெங்கும் நடைபெறும் போராட்டங்களில் மாணவர் பங்கு குறிப்பிடத்தக்கதாகத் திகழ்கிறது. விழிப்புணர்ச்சி பெற்று மாணவர்கள் திரண்டெழுவது தமிழ்நாட்டில்மட்டும் நடைபெறும் நிகழ்ச்சியல்ல. நம்நாட்டையே குலுக்கிக்கொண்டிருக்கும் பிரச்னைகளிலிருந்து ஒதுங்கி நிற்பதின்மூலம் மாணவர்களின் எதிர்காலம் இருளடையாமல் தடுக்கவும் முடியாது.

தமிழ்நாட்டில் மாணவர் பேரவை அமைப்புக்குக்கூட குறுக்கே நிற்கும் கல்லூரி நிர்வாகங்களின் போக்கை மாற்றுவதற்கு அரசு உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று வற்புறுத்துகிறோம்.

---

# 5-வது வகுப்பு வரை பரீட்சை கிடையாதாம்!

## கல்வி டைரக்டர் திட்டம்

விழுப்புரம், நவ. 16—

தமிழ்நாடு கல்விஇயக்குநர்திரு எஸ். வி. சிட்டிபாபு வளவனூரில் நடந்த ஒருகூட்டத்தில் பேசினார்.

### பரிட்சை ஒழிந்தால் அறிவு வளரும்

அவர்பேசுகையில், எஸ். எஸ். எஸ். சி தேர்வு என்பது ஒரு பாஸ் போர்ட்தானே தவிர, அறிவு சோதனை அல்ல என்றும், ஆகவே தேர்வு முறை ஒழிந்தால்தான் அறிவு வளரும் என்றும், தேர்வு முறையை ரத்து செய்வது பற்றி பரிசீலித்து வருவதாகவும் கூறினார்.

### புதியதிட்டம்

அடுத்த ஆண்டு முதல் 1முதல் 5-ம் வகுப்பு வரை, தேர்வு முறையை ஒழித்து புதிய பாடத் திட்டத்தைப் புகுத்தப் போவதாக கூறினார்.

---

# பெரு முதலாளிகளின் கொள்ளை லாப வேட்டை!

பொருளாதாரத்தின் மீது ஏகபோக முதலாளிகளின் பிடிப்பு, அதிகரித்திருக்கிறது. 686 தனிமுதலாளிகளின் கம்பெனிகளைப்பற்றி 'எகனமிக்ஸ் டைம்ஸ்' என்ற பத்திரிகை ஒரு ஆராய்ச்சி செய்திருக்கிறது.

தொழிலாளர்களைச் சுரண்டுவதும், கொள்ளை லாபமடிப்பதும் உயர்ந்து கொண்டே போகும்போது இந்த முதலாளிகளின் மீதுவரிச்சுமைகுறைய ஆரம்பித்திருக்கிறது என்று அந்த ஆராய்ச்சிக் கட்டுரை படம் பிடித்துக் காட்டுகிறது.

பல கூட்டுக் கம்பெனிகளின், வரவு செலவுக்கணக்கான பட்டியல் ஒரு வருடத்தில் அதிர்ச்சியூட்டுமளவுக்கு முதலாளிகளின் பிடிப்பு பரவலாக்கியிருக்கின்றன என்பதைத் தெளிவாக்குகிறது.

1968—69 1969—70-ம் ஆண்டுகளின் வரவு செலவுக் கணக்கைப் பார்த்தபோது, நாட்டின் தொழில் துறையைப் பூராவும் ஒப்பிட்டால், மிகப் பெரிய கம்பெனிகளின் வளர்ச்சியும் லாபமும் அதிகமாயிருக்கிறது.

சுரண்டல் கணக்கு

ஒரு தொழிலாளியை முதலாளி எப்படிச்சுரண்டுகிறான்? இதை ரூபாய், நயாபைசா கணக்கில் சொல்ல முடியுமா? அப்படியானால் அந்தக் கணக்குத்தான் என்ன? முதலாளி போட்ட முதலுக்கு மட்டும் லாபம் பார்ப்பதில்லை. தொழிலாளிக்குக் கொடுக்கும் கூலியிலும் லாபம் பார்க்கிறார். அதாவது, ஒரு தொழிலாளியின் உற்பத்தியின் மதிப்பு எவ்வளவோ, அதைவிடக் குறைந்த கூலி கொடுக்கிறார். இப்படி குறைந்த கூலிக்கு உழைக்கும் தொழிலாளியின், உழைப்பின் மிகுதியும் முதலாளிக்கு மிச்சமாகிறது. இதுவே, மூலதனத்தை உண்டாக்கும் கருவியாகவும் பயன்படுத்தப்பட்டது.

இந்த உபரி உழைப்பு எவ்வளவு அதிகமோ, அவ்வளவுக்கு சுரண்டலும் அதிகமாகும், இதை கணக்கில் கூற வேண்டுமானால்,

$$\frac{\text{உபரி மதிப்பு}}{\text{ஊதியம்}} \text{க்கு } 100$$

என்று கூறலாம்.

இந்தக் கணக்குப்படி, 'எகனமிக்ஸ் டைம்' கொடுத்துள்ள புள்ளிவிபரம் வருமாறு;

| | ஆண்டு 1968—69 | ஆண்டு 1969—70 |
|---|---|---|
| அதிகமாக உற்பத்தி செய்தது | 1,179 கோடி | 1,321 கோடி |
| சம்பளம் கூலி முதலியவை | 567 ,, | 615 ,, |
| உபரி மதிப்பு | 612 ,, | 706 ,, |
| சுரண்டல் விகிதம் | 612 / 597 க்கு 100 | 706 / 615 க்கு 100 |
| | 108 சதவிகிதம் | 114 8 சதவிகிதம் |

உழைப்பைச் சுரண்டி, உபரியாக லாபம் சம்பாதிப்பதோடு மட்டும் இவர்கள் நின்று விடுவதில்லை. பொருளின் விலையை உயர்த்துகிறார்கள். ஏறிவரும் விலைவாசிகள் தொழிலாளியின் வருவாயைக் குறைக்கிறது.

இந்தக் கம்பெனிகளிலும் அதிக மூலதனம் போட்டவர்கள், அதிகமாக, லாபம், அடைகிறார்கள்; உழைப்பைச் சுரண்டுவதும் அதிகமாகிறது. கீழே கொடுக்கப்பட்டுள்ள பட்டியல் இதைத் தெளிவாகக் காட்டும்.

| மூலதனம் | கம்பெனி எண்ணிக்கை | சுரண்டல் விகிதம் 69—70 ஆண்டு |
|---|---|---|
| 1கோடி வரை | 502 | 76 சதவிகிதம் |
| 5 லிருந்து 50 கோடி வரை | 97 | 106·2 சதவிகிதம் |
| 10 கோடிக்குமேல் | 85 | 145·7 சதவிகிதம் |

இதே சமயத்தில் இவர்களுடைய வரிச்சுமை குறைந்து விட்டது. சிறிய கம்பெனிகள் வளர வளர அவை பெருகி, அவர்கள் வரி குறைய, நிகர லாபம் அதிகரிக்கிறது. 1968—69 ம் ஆண்டு அவர்கள் செலுத்திய வரியைவிட இந்த ஆண்டு 3 சதம் குறைவு.

தேக்க நிலையிலும் வளர்ச்சி

1971ம் ஆண்டு, தொழில் உற்பத்தி குறைந்து. தேக்கமடைந்து விட்டது என்று கூறினார்கள்.

ஆனால், இந்தக் சந்தர்ப்பத்தில்கூட, பெரிய கம்பெனிகளின், சொத்து வளாத் தொடங்கியது. அவர்கள் சொத்து 12.1 சதவிகிதம் வளர்ந்தது. விற்பனை 13.4 சதவிகிதம் பெருகியது. நிகர லாபம் 33 சதவிதம் உயர்ந்தது.

இப்படி வளர்ந்தும், அவர்கள், தங்கள் முதலை, தொழிலில்போட சண்டித்தன செய்தார்கள் அவர்களுடைய ஏகபோகத்தை உடைத்தெறிய லாயக்கற்ற இந்திரா அரசு, அவர்களுடைய கட்டளைக்கு அடிபணிய இசைந்தது. தொழில் வளர்ச்சித்துறை அமைச்சர் திரு மைனூய்ஹக் சௌத்திரி கூறுகிறார் "சவான், தேசீயமாக்கப்பட்ட வங்கிகள், முதலாளிகளுக்கு, எப்படி கடன் கொடுத்து உதவுகிறது. என்பதைப் பற்றி புள்ளி விபரத்தோடு கூறினார். இத்தனை காலமாக அவர்கள், லைசென்ஸ்காக மிகுந்த காலதாமதம் ஆகுகிறது. லைசென்ஸ் பெறும் முறையும் குறைபாடுள்ளதாயிருக்கிறது என்று கூறினார்கள். இப்போது, நான் விரைவாக லைசென்ஸ் கொடுக்கிறேன். காலதாமதத்தைத் தவிர்த்து விட்டேன். இருந்தாலும் இப்போது அவர்கள், வங்கியிலிருந்து தேவையானப் பணம் கிடைப்பதில்லை என்கிறார்கள்" என்றார்.

முதலின்று லாபம்

பெரிய முதலாளிகள். இவர்கள் கூறுவது போல் தங்கள் முதலை சோம்பியிருக்க விடவில்லை. அவர்களிடம் தயாராகப் பல திட்டங்கள் இருக்கின்றன. தாங்கள் முதல் போடாமல், அரசிடமிருந்து, கடன் பெற்று தொழில் துவக்க விரும்புகிறார்கள். அரசிடம் இருந்து பல புதிய சலுகைகளைப் பெற விரும்புகிறார்கள் தாங்கள் குறைவாக முதல் போட்டு, அரசின் உதவியோடு தொழில் நடத்த விரும்புகிறார்கள். அதேசமயத்தில், அந்தத் தொழிலை தங்கள் கைக்குள் அடக்கிக்கொள்ளவும் பார்க்கிறார்கள் "டாடாவிடம் மட்டும், 200 கோடிக்கான திட்டங்கள் தயாராக இருக்கிறது" என்கிறார், டாடாவின் டைரக்டராக, திரு. ஜே டி. சோக்ஸி.

டாடா கம்பெனிக்கு, 10 கோடி கடனும், சலுகைகளும் கொடுத்து, இந்திரா அரசு உதவ முன் வருகிறது.

இந்தப்பெரிய நிறுவனங்கள், தங்கள் முதலை, உறையைச் செய்வதில்லை, அதிக லாபம் கிடைக்கும், இடங்களில், தங்கள் முதலைப் போடுகிறார்கள். நகர்புறச் சொத்துக்களிலும் கட்டிடங்களில், தங்கும் விடுதிகளில், விவசாய நிலங்களில், விவசாயக் கருவிகள், பண்ட விநியோகத் துறைகளில் தங்கள் முதலைக்கொட்டுகிறார்கள்.

உற்பத்தித் துறையை ஊக்குவிப்பதற்குப் பதிலாக, இது சிறிய உற்பத்தியாளர்களை நசுக்குகிறது.

தேக்கமடைந்த, வாங்கும் சக்தியைக் கொண்ட நிலையில், இவர்கள் தங்கள் நிலையை ஏகபோகத்தை உறுதிப் படுத்திக் கொள்கிறார்கள் இது சமுதாயத்திற்குச் செய்யும், கேடுகளில் ஒன்றாகும். இருந்தாலும் அவர்களை யாரும் அசைக்க முடியாது. காரணம் அரசையே ஆட்டிப் படைக்க அவர்களால் முடியும்

---

பொன்மலையில்

## தியாகி பரமசிவம் நினைவு நாள் கூட்டம்

பொன்மலை, நவ. 16 — தியாகி பரமசிவம் நினைவு நாளை யொட்டி நவ. 6-ந் தேதி மாலை பொன்மலை சங்கதிடலில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டம் ஆரம்பமாவதற்கு முன்னதாக தியாகி பரமசிவம் படத்திற்கும், தியாகிகள் சின்னத்திற்கும் மலர் மாலைகள் அணிவித்து அஞ்சலி செலுத்தப்பட்டது.

டி.ஆர்.ஈ யூனியன் பொதுச்செயலாளரும், லேபர் சொசைட்டியின் நீண்டநாள் உறுப்பினருமான தோழர் என். கணபதி லேபர் சொசைட்டியைப்பற்றி நீண்டதொருஉரையாற்றினார்.

தோழர் அனந்த நம்பியார் தியாகி பரமசிவம், சங்கத்தின் பால் வைத்திருந்த பற்றையும் அபராத உழைப்பையும், தன்னலமற்ற தியாகத்தையும். அடக்குமுறையைக்கண்டு அஞ்சாத நெஞ்சுரத்தையும் விளக்கிப் பேசினார்.

மத்திய அரசும், மாநில அரசும் மக்களைத் திட்டமிட்டுத் திசை திருப்பும் வேலையில் சாமர்த்தியமாக இறங்கியுள்ளது என்று தோழர் மதுரை நன்மாறன் கூறினார்.

காலனி கமிட்டி உறுப்பினர் தோழர் பெரியநாயகசாமி பேசினார். கூட்டத்திற்கு கிளைத் தலைவர் தோழர் ஜி. ரெங்கநாதன் தலைமை வகித்தார்.

---

# குறிப்புகள்

## பல்கலைக் கழக சுதந்திரத்தில் மத்திய அரசு குறுக்கீடு!

மக்களுடைய ஜனநாயக உரிமைகளையும், சுதந்திரத்தையும் ஒழித்துக்கட்டும் திசு இந்திராகாந்தியின் அரசுதீவிரமாக ஈடுபட்டுள்ளது. கல்வித்துறையைக்கூட அவர்கள் விட்டு வைக்கத் தயாராக இல்லை,

சாந்திநிகேதனில் உள்ள "விஸ்வபாரதி பல்கலைக் கழகத்தை" யும் இப்போது மத்திய அரசு தன்னுடையநேரடி நிர்வாகத்தின் கீழ் கொண்டுவந்துவிட்டது பட்ஜெட் கூட்டம் முடிந்த பின்னர்,மீண்டும் மாரிக்காலக் கூட்டத் தொடர் கூடும் வரை பல அவசரச்சட்டங்களை இந்திரா அரசு பிறப்பித்துள்ளது.

அதில் ஒன்றுதான், சாந்திநிகேதனிலிருக்கும், பல்கலைக் கழகத்தைத் தன்னுடைய நிர்வாகத்துக்குள் கொண்டு வந்திருப்பதாகும். அதன்படி, பல்கலைக் கழகத்தின் நீதி மன்றம் நிர்வாகக்குழு, கல்விக்குழு ஆகியவை எல்லாம், சுதந்திரமாக இயங்க முடியாதபடித் தடுக்கப்பட்டுள்ளன.

இந்தக் குழுவிற்கான உறுப்பினர்கள் மத்திய அரசால் நியமிக்கப்படுவார்கள். ஜனாதிபதியின் கட்டளைக்குப் பணிந்துதான் இக்குழுக்கள் செயல்படவேண்டும் அது மட்டுமல்ல, அதிகாரிகளையும், ஊழியர்களையும் அடக்கி ஒடுக்க, அரசாங்கம் அதிகாரத்தையும் கையில் எடுத்துக் கொண்டுள்ளது.

சமூக விரோதிகளை ஒடுக்குவதின் பெயரில் இந்த அவசரச் சட்டம் கொண்டு வரப்பட்டதாக கூறப்படுகிறது.

இந்தச் சமூக விரோதிகள்,காங்கிரஸ் ஆட்சியாளர்களின் கையாட்களாக, மேற்கு வங்கத்தில் பவனி வருகிறார்கள். இவர்களைத் தூண்டி வன்முறையில் இறங்கச் செய்வது காங்கிரஸ் ஆட்சியே. இந்த வன்முறையைக் கட்டுப்படுத்துவதின் பெயரில் மிகக் கேவலமான, பாசிச அடக்கு முறையை காங்கிரஸ் ஆட்சி கட்டவிழ்த்து விட்டுள்ளது. மத்திய ரிசர்வ் போலீஸ் படையும், இராணுவமும் இந்தச் சமூக விரோதிகளுக்குத் துணையாக நிற்கின்றன.

விஸ்வபாரதி பல்கலைக்கழகத்தை அரசு எடுத்துக் கொள்வதின், நோக்கமும் சமூக விரோத சக்திகளைத் தூண்டிவிடும் நோக்கத்துக்கு மாறுபட்டதாக இருக்கமுடியாது. சமீப காலங்களில், கமிட்டிகளிலும், கமிஷன்களிலும், "புதிய முற்போக்காளர்களை" நியமித்துவருவதாக அரசு பசப்பிவருகிறது. இதை நம்பி பல "முற்போக்காளர்கள்" ஏமாறுகிறார்கள். இந்த ஏமாற்று முயற்சிக்குப் பலியாகாதவர்களையும் அரசு சும்மாவைக்கவில்லை. பல்கலைக்கழகத்தின் நிர்வாகம் தழுவுத்து, உள்ள அதிகாரத்தைப் பயன்படுத்தி, தங்களை எதிர்ப்பவர்களை, வெளியேற்ற அரசு முயற்சிக்கும் என்பது நிச்சயம். இந்தக்கல்வி நிறுவனத்தை எப்படியாவது கைப்பற்றவேண்டும், என்பதுதான் அரசின் நோக்கமே தவிர, அதைச் சீராக இயங்கச்செய்வது அரசின் நோக்கமல்ல.

ஜனநாயக உரிமைகள் தாக்கப்படுவதை ஆதரிப்பவர்கள் இப் பல்கலைக் கழகத்தை அரசு மேற்கொண்டிருப்பதையும் வரவேற்கிறார்கள். "இந்த நடவடிக்கை தேவையானதே! இதேபோன்று, கல்கத்தா பல்கலைக் கழகத்தையும் எடுத்துக் கொள்ளவேண்டும்" என்று "ஸ்டேட்ஸ்மன்" பத்திரிகை எழுதியுள்ளது. ஸ்டேட்ஸ்மேனின் இந்தக் கருத்து காங்கிரஸ் ஆட்சியாளர்கள் நமது பல்கலைக் கழகச் சுதந்திரத்தை நசுக்குவதற்கு எத்தகைய திட்டங்களை அரசு தீட்டியுள்ளது என்பதை எதிரொலிக்கும் கருத்தாகும்.

---

போனஸ் வரம்பை உயர்த்த

வேலை நிரந்தரம், கிராஜுவிட்டி கோரிக்கைகளுக்காக

# ஒன்றுபட்டு போராடுவோம்

## தென்னுற்காடு மின்தொழிலாளர் கூட்டங்களில் அறைகூவல்!

விழுப்புரம், நவ. 15 —

தென்னுற்காடு மாவட்ட மின்சாரத் தொழிலாளர் சங்கத்தின் "மத்திய அமைப்பு"தின கூட்டங்கள் விழுப்புரத்திலும், திண்டிவனத்திலும், கடலூரிலும், சிதம்பரத்திலும், விருத்தாசலத்திலும், சின்ன சேலத்திலும் நவ. 15-ம் தேதி நடைபெற்றன. பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

தி. மு. க. முன்னேற்றப் பேரவை 10 சதம் குறைந்தபட்சம் போனஸ் வேண்டுமென்று தீர்மானம் போட்டுள்ளது. அதேசமயம் தமிழக அரசு 4 சத வரம்பை ஏற்றுமல் கொஞ்ச காலம் நீடிக்க வேண்டுமென மத்திய அரசிற்கு சிபாரிசு செய்துள்ளது. மின்சாரத் தொழிலாளர்களுக்கு 5 சதத்திற்கு மேல் இல்லையென்று அறிவித்துள்ளது. இதை பொது மக்களை ஏமாற்றும் சாகசமென இக்கூட்டம் தனது எதிர்ப்பினை தெரிவித்துக் கொள்கிறது.

தமிழக அரசு முன் உதாரணமாகயிருந்து மின் துறையில் 8-1/3 சதம் குறைந்தபட்சம் போனஸ் என்ற அடிப்படையில் போனஸ் பிரச்சனையை 1970—71க்கு மறுபரிசீலனை செய்யவேண்டும். மத்திய அமைப்பு விடுத்த ஒற்றுமை அழைப்பை ஏற்க சம்மேளனமும், கணக்காயர் சங்கமும், பிற சங்கங்களும் மறுப்பதானது தொழிலாளர்களின் ஒட்டுமொத்தநலனுக்குத்தான் நஷ்டம் என்பதைதெரிவித்து மீண்டும், ஒன்றுபட்டுப் போராட வர அந்த அமைப்புக்களையும் குறிப்பாக தொழிலாளர், ஊழியர்களையும் இக் கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

தினக்கூலி உயர்வு

பிரயாணப்படி

தினக்கூலி தொழிலாளர் ஆண்டு உயர்வு, பிரயாணப் படி ஏற்றம், நகர ஈட்டுப்படி, மலைவாழ்வுபோன்ற பிரச்சனைகள் பிரதானமாக நமது கோரிக்கைகளாகும். இவற்றோடு வேலைப்பளு, வீட்டுவசதிகள், கிராஜுவிட்டி, வேலை நிரந்தரம், சமவேலைக்குச் சமஊதியம், வாரிசுகளுக்கு வேலைவாய்ப்பு போன்ற கோரிக்கைகளையும், நாம் வலியுறுத்தி வருகிறோம்.

தன்யாகூட்டி தொழிற்சங்கப் பிரதிநிதிகளைமட்டும் அழைத்து ஆக். 8-ம் தேதி சில கோரிக்கைகளை மட்டும்ஏற்று முதலமைச்சர் அறிவித்த போக்கினை இக்கூட்டம்கண்டிக்கிறது. அக்கூட்டத்தில் கோரிக்கைகளின் முழு விவரத்தையும் பரிசீலனை செய்யாமல், மேலே கூறப்பட்ட சிலவற்றை மட்டும் அறிவித்து அநீதியிழைக்கப்பட்டுள்ளது. எண்ணூரில் 50 பைசா ஆண்டு உயவு 1—12—70 லிருந்து கிடைத்தும் மற்ற தினக்கூலித் தொழிலாளர்களுக்கு 25 பைசா 1—6—71ல் இருந்து என்பது வஞ்சனையாகும். நகர ஈட்டுப்படியிலும், பிரயாணப் படியிலும், மலைவாழ்வுப்படியிலும் அரசு ஊழியர்களைவிட மோசமாக அறிவிக்கப்பட்டுள்ளது. இவற்றை நம்மோடு பேசி மாற்றியமைக்க அரசும், வாரியமும் முன்வர வேண்டுமென்றும், அதற்காகத் தொடர்ந்து போராட சகல மின் தொழிலாளர்களையும், சங்கங்களையும் இக்கூட்டம் அறைகவி அழைக்கிறது.

மத்திய மாநில அரசுகளின் கொள்கைக்கு எதிர்ப்பு

மத்திய அரசின் கொள்கைகளை எதிர்த்து இந்திய நாடு முழுவதும் நடைபெறும் தொழிலாளர் போராட்டங்களை குறிப்பாக வங்கத்தில் பாசிச அடக்குமுறை கொண்டு நசுக்குவதையும் இக்கூட்டம் கண்டிக்கிறது. மாநில அரசின் ஜனநாயகவிரோதக்கொள்கைகளையும் எதிர்க்கிறது.

---

# ஆசிரியருக்கு வரையும் மடல்

## மதுரை மாநகராட்சியின் மகப்பேறு விடுதியின் மகிமை

ஐயா,

மதுரை 2-வது வார்டில், செல்லூர் கண்மாய்க்கரை சமீபம் ஒரு மகப்பேறு விடுதியுள்ளது அங்கே பிரசவத்திற்கு செல்லும் தாய்மார்களிடம் குடும்பக் கட்டுப்பாடு என்று கூறி கொடுமைப்படுத்துவதும் அறுவை சிகிச்சையைச் சொல்லி, அல்லல்படுத்துவதும் இத்தனை குழந்தை எதற்கு உனக்கு என்று இடித்துக் கூறுவதுமாக உள்ளது.

இதற்கும் மேலாக குழந்தை பிறந்தால் அந்த குழந்தையை குளிப்பாட்டுவதற்குக்கூட அந்த ஆஸ்பத்திரியில் தண்ணீர் கிடையாது அவரவர் வீட்டிலிருந்து தண்ணீர் கொண்டு வரச் சொல்லும் கோரக் காட்சி அங்கு நடந்துகொண்டிருக்கிறது.

இதையறிந்த இவ்வட்டாரத் தாய்மார்கள், அங்கே பிரசவத்திற்கு செல்லக்கூட அஞ்சுகிறார்கள்.

கைத்தறி நெசவாளர்கள். வாழும் இப்பகுதியில் மகப்பேறு விடுதி வேண்டுமென்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர் இந்த வார்டில் கவுன்சிலராக இருந்த காலத்தில் இந்த மகப்பேறு விடுதி திறக்கப்பட்டது. அன்று காங்கிரஸ் நகரசபையாக இருந்த காலத்தில் தாங்கள் நகரசபை பொறுப்பேற்றுல் ஆஸ்பத்திரிக்கு அதிகமாக வசதிகள் செய்து தருவோம் என்று கூறிய தி. மு. கழகம் இன்று மாநகராட்சியைப் பிடித்த பின் செய்திருப்பதென்ன? இந்நிலையை மாற்றி பிரசவத்திற்கு செல்லும் தாய்மார்களுக்கு வசதியளிக்க முன் வருவார்களா? அல்லது பாராட்டு விழாவிற்கும் பவுன் சங்கிலிக்கும் செல்வார்களா? பொறுத்திருந்து பார்ப்போம்.

இப்படிக்கு

மு. குமாரசாமி

---

மூணாறில்

## பஸ் முதலாளிகள் ஆணவம்!

தோழரே,

மூணாறிலிருந்து போடிமெட்டு, உடுமலைப்பேட்டை முதலான இடங்களுக்கு ஓடிக் கொண்டிருக்கும் எம். பி டி பஸ், சி வி. எஸ். டி. பஸ்கள் சரியாக ஓடுவதில்லை.

மற்றபஸ்களையும் ஓடுவதற்கு இந்த பஸ் முதலாளிகள் விடுவதில்லை. இது பற்றி சம்பந்தப்பட்ட அரசு அதிகாரிகளும் எவ்வித அக்கறையும் காட்டுவதில்லை.

இதனால், தோட்டத்தொழிலாளர்களும், வியாபாரிகளும் பொதுமக்களும் பெரிதும் கஷ்ட நஷ்டங்களுக்கு ஆளாகி அவதிப்படுகிறார்கள் சும்மாவே இருந்து அவதிப்படுவதால் பயனில்லை. பொதுமக்கள் திரண்டெழுந்துபோராடினாலொழிய வழிபிறக்க வழியில்லை.

இங்ஙனம்

ஜி. வரதன், எம். எல். ஏ.

---

திருவள்ளூர் வட்ட

## விவசாயிகள் சங்க அமைப்புக் கூட்டம்

திருவள்ளூர், நவ. 16 — செங்கற்பட்டு மாவட்டம் திருவள்ளூர் வட்ட விவசாயிகள் சங்க அமைப்புக்கூட்டம் 14—11—71 காலை 10 மணி அளவில் திருவள்ளூரில் தோழர் என் ராகவன் தலைமையில் நடைபெற்றது.

கூட்டத்தில் செங்கல்பட்டு மாவட்ட விவசாயிகள் சங்க செயலாளர் சி. கே. மாணிக்கம் பேசினார்.

இக் கூட்டத்தில் திருவள்ளூர் வட்ட விவசாயிகள் சங்கம் அமைக்கப்பட்டது கீழ் கண்டவர்களை சங்க நிர்வாகஸ்தர்களாக ஏகமனதுடன் தேர்ந்தெடுக்கப்பட்டது தலைவராக தோழர். ஜி. மதுரையும் செயலாளராக எம், கோவிந்தராஜனும் பொருளாளராக என். ராகவனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

---

வேலை நேரத்தில்

## ரயில்வே தொழிலாளி மீது தாக்குதல்

திருச்சி, நவ. 16— போத்தனூர் எஸ், அண்ட்- டி. ஒர்க்ஷாபபில் அக் 7, 8 தேதிகளில் அங்கீகரிக்கப்பட்ட இரு சங்கங்களின் முக்கியஸ்தர்கள் நோட்டீஸ் போர்டில் விளம்பரம் ஒட்டுவதைத் தொடர்ந்து ஏற்பட்ட தகராறில் அடிதடி கைகலப்பில் இறங்கியதாகக் கூறப்படுகிறது. இந்தக் கைகலப்பு செக்ஷன் அதிகாரி ஒருவரின் முன்னிலையிலேயே நடைபெற்றதாகவும் காயமடைந்த தொழிலாளர்கள் பிறகு ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டதாகவும் அறியப்படுகிறது.

# திருச்சி மாவட்டத்தில் ஏ. கே. ஜி. சுற்றுப் பயணம்

## ரூ. 1871 நிதி அளிப்பு

அகில இந்திய கட்சி காங்கிரஸ் பிரச்சாரத்திற்கும், நிதி வசூலுக்கும் தோழர் ஏ. கே. கோபாலன் நவம்பர் 10-ம் தேதி முதல் சுற்றுப் பயணம் மேற்கொண்டார்.

### லால்குடி தாலுகா

நவம்பர் 10-ந் தேதி காலை 10 மணியளவில் லால்குடி தாலுகா அரியூருக்கு தோழர் ஏ. கே. கோபாலன் வருகை தந்தார். ஊர் எல்லையிலேயே திரளான விவசாயிகள் ஆணும் பெண்ணுமாய் கூடி வண்ண கோஷம் இட்டு கூட்டம் நடத்தும் இடத்திற்கு ஊர்வலமாய் அழைத்துச் சென்றனர். கூட்டத்திற்குத் தோழர் எஸ். சுப்பிரமணியம் தலைமை வகித்தார். விவசாயிகள் இன்றைய நிலை குறித்தும் விவசாயத் தொழிலாளர் இயக்கங்களைப் பலப்படுத்தும் தேவை பற்றியும் தோழர் ஏ. கே. ஜி. உரையாற்றினார். தாலுகா கட்சியின் சார்பாக அரியூரில் ரூ. 150-ம், கோத்தாரி சர்க்கரை ஆலைத் தொழிலாளர் சார்பில் ரூ. 200-ம், லால்குடி கட்சி கிளையின் சார்பாக ரூ. 40-ம் அளிக்கப்பட்டது.

### எடமலைப்பட்டி புதூரில்

மாலை 6 மணிக்கு எடமலைப்பட்டி புதூருக்கு வந்தபோது சுரங்க தொழிலாளர்கள், ரயில்வே தொழிலாளர்கள் மற்றும் பல தொழிலாளர்கள் சிறப்பான வரவேற்பளித்தனர். கூட்டத்திற்கு தோழர் சிதம்பரம் தலைமை வகித்தார். தோழர் ஏ. கே. ஜி. யிடம் கட்சிகிளையின் எடமலைப்பட்டி புதூர் கிளை சார்பில் ரூ. 101-ம், ராப்ஜ் நகர் கிளை சார்பில் ரூ. 25-ம் வழங்கப்பட்டது.

### துப்பாக்கித் தொழிற்சாலைப் பகுதி

திருச்சி எஸ். ஏ. பி. தொழிற்சாலை அருகில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் டி. பாலசுப்பிரமணியம் தலைமை தாங்கினார். தோழர்கள் பி. ஏ. ஆனந்த், பி. ராமச்சந்திரன் ஆகியோர் பேசினர். தோழர் ஏ. கே. ஜி. யிடம் கட்சி நிதிக்காக ரூ. 300 அளிக்கப்பட்டது. தோழர் ஏ. கே. ஜி. பேசுகையில் பாதுகாப்பு இலாகாவில் [illegible] 5 கோடி ரூபாய் மதிப்புள்ள இயந்திரங்கள் [illegible] தொழிலாளர்கள் [illegible] பேசினார். [illegible] பாதுகாப்பைப் பலப்படுத்துவதாக [illegible]

### திருவெறும்பூரில்

தோழர் வடமலை தலைமையில் நடைபெற்ற மாபெரும் கூட்டத்தில் தோழர் உமாநாத், மலைநாதன் ஆகியோர் விளக்கமாகப் பேசியபின், தோழர் ஏ. கே. ஜி. கூட்டத்திற்கு வந்தபோது விண்ணதிர கோஷங்களுடனும், மகிழ்ச்சி ஆரவாரத்துடனும் வரவேற்கப்பட்டார். தோழர் ஏ. கே. ஜி. யிடம் பாய்லர் தொழிற்சாலை தொழிலாளர்களிடமிருந்து வசூல் செய்யப்பட்ட ரூ. 1025-ஐ தோழர் ஆனந்த் அளித்தார். குமரேசபுரம் விவசாயிகள் சார்பாக ரூ. 30 அளிக்கப்பட்டது. தோழர் ஏ. கே. ஜி. நீண்டதோர் சொற்பொழிவாற்றினார்.

---

## அமெரிக்க உளவு இலாகாமீது நிக்சன் அதிருப்தி

நியூயார்க், நவ. 16—

அமெரிக்க ஜனாதிபதி நிக்சன் அமெரிக்க ஒற்றர் படையினரின் (சி. ஐ. ஏ) நிர்வாகத்தை கடுமையாகக் கண்டித்தார்.

அவர்கள் வியத்நாமிலிருந்து சோவியத் யூனியன் வரை செய்துள்ள தவறுகளை சுட்டிக் காட்டி, அமெரிக்க ஒற்றர் படையை மாற்றியமைக்க வேண்டும் என்று கூறினார்.

ஒற்றர் படை 1962-ல் கியூபாவின் "பிக் ஜசைதி" பிரச்சனையிலிருந்து இதுவரை செய்துள்ள தவறுகளை சுட்டிக் காட்டினார்.

ஆனால் அதே சமயத்தில் 1961-ல் காங்கோவின் முற்போக்கு எண்ணமுள்ள [illegible] "அன்டோனியின் ஜெனரல்" [illegible] பற்றியும் [illegible] பின், அங்கு அமெரிக்க ஒற்றர் படையின் நடவடிக்கையைப் பற்றி இன்னும் சிறிது குழப்பம் இருக்கிறது என்று 'நியூஸ் வீக்' பத்திரிக்கை கூறுகிறது.

---

# இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)

# மதுரை-முகவை மாவட்ட மாநாடு

தேனி, நவ. 15—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) மதுரை-முகவை மாவட்ட 9-வது மாநாடு 12—11—71-ஆம் தேதி முதல் 14—11—71-ஆம் தேதி வரை பெரியகுளம் தாலுகா தேனி நகரில் நடைபெற்றது. 214 பிரதிநிதிகளில் 180 பேர் கலந்துகொண்டார்கள்.

விவசாய சங்கத் தலைவரும், மாவட்ட செயற்குழு உறுப்பினருமான தோழியர் கே. பி. ஜானகியம்மாள் அவர்கள் செங்கொடியை ஏற்றி வைத்தார்கள். பிரதிநிதிகள் அணி வகுத்து செங்கொடிக்கு வணக்கம் செலுத்தினர்.

மாநாட்டுக்கு தோழர்கள் என். வரதராஜன், எஸ். ஏ. பெருமாள், கே. ராஜப்பன் ஆகிய மூன்று பேர்கள் தலைமைக் குழுவுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

### தியாகிகளுக்கு அஞ்சலி!

ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தில் முன்னணித் தலைவரும், உலக கம்யூனிஸ்ட் இயக்கத்தின் ஒப்பற்ற தலைவருமான தோழர் ஹோ-சி-மின்னுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

ஏகாதிபத்திய இயக்கத்தின் முன்னணியில் நின்ற சூடான் கம்யூனிஸ்ட் கட்சி பொதுச் செயலாளர்க்கும், மற்றும் இந்தோனிசியாவில் படுகொலை செய்யப்பட்ட கம்யூனிஸ்டுகளுக்கும் மாநாடு சிரம் தாழ்த்தி வணக்கம் செலுத்தியது.

இந்திய ஜனநாயக இயக்கத்தின் முன்னணி படையாக விளங்கும் மேற்கு வங்க மக்கள் இயக்கத்தை அடக்கி ஒடுக்க [illegible] முன்னணி வீரர்களான படுகொலை செய்யப்பட்ட 500 தியாகிகளுக்கும் மாநாடு வணக்கம் செலுத்தியது. இதே போன்று கேரளத்தில் உயிர் நீத்த தியாகிகளுக்கும் மாநாடு அஞ்சலி செலுத்தியது.

நிலப்பிரபுத்துவ கொலைவெறியர்களால் கீழ்வெண்மணியில் ஹரிஜன பெண்களும், குழந்தைகளுமாக 44 தியாகிகளுக்கும் சிரம்தாழ்த்தி மாநாடு வணக்கம் செலுத்தியது.

மாவட்ட கமிட்டி உறுப்பினராக இருந்த தோழர்கள் ஜோன்டர் துரைச்சாமி, ப. சுந்தரம் இருவரின் மரணத்திற்கு மாநாடு அஞ்சலி செலுத்தியது.

### தோழர் ஏ. பாலசுப்பிரமணியம் உரை

மத்திய கமிட்டி உறுப்பினர் தோழர் ஏ. பாலசுப்பிரமணியம் நெருங்கி கொண்டிருக்கும் முதலாளித்துவ நெருக்கடி முரண்பாடுகள் குறித்தும் உடைந்து கொண்டிருக்கும் முதலாளித்துவத்தை ஒழித்து அடித்து தூக்கி எறிய வேண்டிய உலக கம்யூனிஸ்ட் இயக்கம் பிளவு பட்டிருப்பதின் காரணமாக [illegible] சோஷலிசத்திற்கான போராட்டங்கள் கடும் சிரமங்களை எதிர்நோக்கியிருக்கும் கூடிய அபாயங்களையும் விளக்கிப் பேசினார்.

மேலும், அன்னிய மூலதனத்தை பறிமுதல் செய்யாமல், ஏகபோக முதலாளிகளின் சொத்துக்களை பறிமுதல் செய்யாமல், பெரும் நிலப்பிரபுக்களின் கையிலுள்ள நிலத்தை பிரித்து ஏழை எளிய விவசாயிகளுக்கு விநியோகிக்காமல் [illegible] சோஷலிசம் [illegible] பற்றியும் பேசினார்.

வங்கத்திலும், கேரளத்திலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையிலுள்ள மந்திரி சபைகள் [illegible] தொழிலாளர், விவசாயிகள் [illegible] போலீஸ் தடியடி [illegible] பற்றியும் விளக்கினார்.

இதன் விளைவு காங்கிரஸ் எதிர்ப்பு இயக்கமெனபது சுரண்டும் வர்க்கங்களை எதிர்க்கும் வர்க்கப் போராட்டமாக வளர்ந்தது. வர்க்கப் போராட்டத்தை உடைப்பதை நோக்கமாகக் கொண்டு காங்கிரஸ் கட்சி இரண்டாக உடைந்தது. சிண்டிகேட் கோஷ்டி வர்க்கப் போராட்டத்தின் முன்னணி படையான மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை உடனே தாக்க வேண்டுமென்று கூறியது. இண்டிகேட் கோஷ்டி காங்கிரஸ் எதிர்ப்பு முன்னணியை உடைத்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை தனிமைப் படுத்தி தாக்க வேண்டும் என்று கூறியது.

### இண்டியும் சிண்டியும் ஒன்றே!

வலது கம்யூனிஸ்ட் கட்சி இந்திரா காங்கிரஸை முற்போக்கு என்று வர்ணித்தது. எஸ். எஸ். பி. அது கோஷ்டிச் சண்டை என்று கூறியது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான், இண்டிகேட், சிண்டிகேட் இரண்டும் ஒரே வர்க்கத்தின் பிரதிநிதிகள் என்று கூறியது.

அதாவது அன்னிய மூலதனத்தை பறிமுதல் செய்வது ஏகபோக முதலாளிகளின் சொத்துக்களை பறிமுதல் செய்வது பெரும் நிலப்பிரபுக்களின் நிலத்தை எடுத்து ஏழை எளிய விவசாயிகளுக்கு கொடுப்பது பாடுபடும் மக்களுக்கு ஜனநாயக உரிமைகளை விஸ்தரிப்பது போன்ற அடிப்படையான கொள்கைகளில் இரண்டு காங்கிரஸ் கட்சிக்கும் எவ்வித வித்யாசம் இல்லை என்றும், தந்திரத்தில் தான் வித்தியாசம் என்றும் நாம் கூறினோம்.

மந்திரி சபைகளில் பங்கெடுக்கக்கூடாது என்று கூறிய இடது சாரி திரிபு, அல்லது மந்திரி சபையில் பங்கெடுத்தால் போராடக்கூடாது என்ற வலது கம்யூனிஸ்டுகளின் கருத்து தவறு என்பதையும் காங்கிரஸ் கட்சியின் பிளவு குறித்து நாம் எடுத்த அனுபவங்கள் நிரூபித்துள்ளன என்றும் தோழர் பாலசுப்பிரமணியம் விளக்கினார்.

### தி. மு. க அரசின் போக்கு

1967—ல் காங்கிரஸ் எதிர்ப்பு பேசி ஆட்சிக்கு வந்த தி மு கழகம் காங்கிரஸ் எதிர்ப்பை கைவிட்டு விட்டது. காரணம் தமிழ் மக்களை சுரண்டுவதற்கு அன்னிய முதலாளிகளையும், இந்திய ஏகபோக முதலாளிகளையும் வா வா என்று வரவேற்கிறது. பெரும் நிலப்பிரபுக்களை தாக்குவதற்கு தி.மு க. அரசு மறுக்கிறது.

மறுபுறம் தங்களுடைய உரிமைகளுக்காகவும் கோரிக்கைகளுக்காகவும் போராடக்கூடிய பாடுபடும் மக்களை தி. மு. க. அரசு கொடிய அடக்குமுறைக்கு உள்ளாக்குகிறது. குறிப்பாக போலீஸ் அடக்குமுறை என்றுமில்லாத அளவு அதிகரித்துள்ளது. நடைமுறையில் காங்கிரஸ் கட்சி கையாண்டு வந்த அதே நடைமுறையைத்தான் தி மு க அரசும் அனுஷ்டிக்கிறது என்று அவர் மேலும் கூறினார்.

1971 தேர்தலுக்குப் பின் பாடுபடும் மக்களை பாதிக்கும் பிரச்சனைகளை மையமாகக் கொண்டு போராட்டங்களின் மூலமாக பல்வேறு கட்சிகளையும் சங்கங்களையும் சார்ந்த மக்களின் ஒற்றுமையும் போராட்டங்களையும் மேலும் மேலும் வளர்ப்பதின் மூலம் தான் ஜனநாயக அணியைக் கட்ட முடியும் என்பதையும். அவர் விளக்கினார்.

தங்களுடைய மாநில சுயாட்சி உரிமைகோரிய கிழக்கு வங்க மக்களை அடக்கி ஒடுக்கி வரும் பாகிஸ்தான் ராணுவ சர்வாதிகாரத்தை எதிர்த்து விடுதலைக்காக போராடும் கிழக்கு வங்க மக்களின் போராட்டத்தை விளக்கியும், கிழக்கு வங்க அரசை அங்கீகரித்து அவர்களுக்கு ஆயுதம் கொடுக்க வேண்டும் என்று இந்தியாவிலுள்ள சகல அரசியல் கட்சிகள் கோரிய போதிலும்; இந்திரா அரசு ஏகாதிபத்திய நிர்ப்பந்தங்களுக்கு பயந்து அங்கீகரிக்க மறுப்பதையும். கிழக்கு வங்க மக்கள் போராட்டத்தின் பால் சோவியத்-சீன கட்சிகள் எடுக்கும் நிலை மார்க்சிஸம்-லெனினிஸத்திற்கு விரோதமானது என்பதை தோழர் ஏ பாலசுப்ரமணியம் விளக்கிப் பேசினார்.

### அமெரிக்காவின் தோல்வி

எல்லா வற்றிற்கும் மேலாக சுமார் 20 ஆண்டுகளாக மக்கள் சீன குடியரசை அழிப்பதையே நோக்கமாகக் கொண்ட அமெரிக்க ஏகாதிபத்தியம் தான் அனுஷ்டித்து வந்த கொள்கையின் தோல்வியை ஒப்புக்கொண்டு மக்கள் சீன குடியரசோடு உறவாடுவதற்கு அமெரிக்கா துடி துடிக்கிறது என்பதையும், இந்திய-சீன எல்லைப் பிரச்சனையை யுத்தத்தின் மூலம் அல்லது பேச்சு வார்த்தையின் மூலம் தீர்க்கவேண்டுமென்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கூறியபொழுது நம்மை சீன ஏஜெண்டுகள் என்று கூறினார்கள். இன்று 12 கோடி ரூபாய் ராணுவத்திற்கு செலவு செய்த பின் இந்திய — சீன நட்புறவிற்கு இந்திரா அரசுதுடிதுடிக்கிறது என்பதையும் தோழர் ஏ பாலசுப்பிரமணியம் கூறினார்.

### அறிக்கை ஏற்றுக்கொள்ளப்பட்டது

அடுத்தபடியாக 1968 நவம்பர் முதல் 1971 செப்டம்பர் வரை மதுரை-முகவை மாவட்டத்தில் நடந்துள்ள வேலைகளில் ஏற்பட்டுள்ள பலன்களை குறித்தும் தோழர் ஏ. பி பழனிச்சாமி விளக்கி கூறினார்.

இந்த அறிக்கையின் மீது 45 தோழர்கள் சுமார் 10 மணி நேரம் பல்வேறு கருத்துக்களை கூறினார்கள்,

மாவட்டக்கமிட்டியின் சார்பாக விவாதத்தில் வந்துள்ள சரியான கருத்துக்களை ஏற்றுக்கொண்டு தவறான கருத்துக்களை விளக்கி தோழர் ஏ. பி. பழனிச்சாமி உரையாற்றிய பின் சில திருத்தங்களோடு மாவட்டக் கமிட்டியின் அறிக்கை ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

23 பேர் கொண்ட புதிய மாவட்டக் கமிட்டி ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டது. மீண்டும் ஏ. பி பழனிசாமி மாவட்டச் செயலாளராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சேலத்தில் நடக்க விருக்கும் மாநில மாநாட்டிற்கு 46 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்

இறுதியாக, மூன்று நாள் மாநாட்டின் நிகழ்ச்சிகளில் பங்கு கொண்ட தோழர் ஏ பாலசுப்பிரமணியம் மாநிலக் கமிட்டியின் சார்பாக வாழ்த்துக் கூறினார். மாநாட்டில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது.

### போராடும் தொழிலாளர்களுக்கு ஆதரவு

மாநாட்டின் இறுதியில் தங்களுடைய உரிமைகளுக்காகவும், கோரிக்கைகளுக்காகவும் போராடிய,போராடிக்கொண்டிருக்கும் மதுரை ஹார்வி, தேனூர், கப்பலூர், பரவை, மகாலட்சுமி மில்களின் தொழிலாளர்களுக்கும், மதுரை சுதந்திரம் மோட்டார் தொழிலாளர்களுக்கும், திண்டுக்கல் சுருட்டு, பிரஸ் தொழிலாளர்களுக்கும், பரமக்குடி, ஆண்டிபட்டி, மதுரை கைநெசவு தொழிலாளர்களுக்கும்,மதுரைபவர்லூம் தொழிலாளர்களுக்கும், உத்தமபாளையம், மதுரை தியாகராஜர் பழனி, திண்டுக்கல் மாணவர்களுக்கு மாநாடு வாழ்த்துக் கூறியது.

### விவசாயிகளுக்கு பாதுகாப்பு

சாகுபடியாளர்களை பாதுகாப்பதற்காக கொண்டுவந்துள்ள சட்டத்தை பயன்படுத்திக் கொண்டு. வாரம் குத்தகை விவசாயிகளை நிலத்தைவிட்டு வெளியேற்றுவதை தமிழக அரசு தடுத்து நிறுத்த வேண்டும். தமிழக அரசு கொண்டு வந்துள்ள நிலச்சீர்திருத்தத்தில் குடும்பத்துக்கு 15 ஸ்டாண்டர் ஏக்கர் என்று விதித்து சகல விதிவிலக்குகளையும் ரத்து செய்யவேண்டும் என்று கோரியது.

மேலும் விவசாய தொழிலாளர்களுக்கு 25 சதம் கூலி உயர்வு கொடுக்க வேண்டுமென்றும் அவர்கள் குடியிருக்கும் மனைகளைச் சொந்தமாக்க வேண்டுமென்றும், வருஷநாடு வடகாடு, கோட்டைமேடு, அய்யம்பாளையம், கொடைக்கானல் ஆகிய பகுதிகளில் நீண்ட காலமாக நிலத்தை உழுதுகொண்டிருக்கும் விவசாயிகளுக்கு பட்டா கொடுக்க வேண்டுமென்று மாநாடுகோரியது

மேலும் 1972 ஜனவரி முதல் விவசாயிகள் உபயோகிக்கும் பம்புசெட்களுக்கு மின் கட்டணத்தை உயர்த்தும் போக்கை கைவிட வேண்டுமென்றும் தமிழக அரசும் தனியார் பஸ் முதலாளிகளும் பஸ் கட்டணத்தை உயர்த்தியிருப்பதைக் கைவிட வேண்டுமென்பதற்கு சர்வகட்சி இயக்கத்தை துவக்குவதென்று மாநாடு தீர்மானித்தது.

### வழக்குகளை வாபஸ் வாங்கு

சென்னை சிம்சன் குரூப் தொழிலாளர்களுக்கு விரோதமாக தி மு க போட்டி சங்கம் வைத்திருப்பதை மாநாடு வன்மையாக கண்டிப்பதோடு, தொழிலாளர்களுக்கு விரோதமாக துரோகத்தனமான ஒப்பந்தத்தை எதிர்த்து போராடிய தொழிலாளர்களையும் தலைவர்களையும் கைது செய்ததை கண்டிப்பதோடு, அவர்கள் மீதுள்ள வழக்குகளையும் வாபஸ் வாங்க வேண்டுமென்று மாநாடு வற்புறுத்துகிறது

மத்திய அரசு கொள்கை பூர்வமாக விவாதத்தில் ஏற்றுக் கொண்ட போனஸ் கொள்கையாகிய குறைந்த பட்ச போனஸ் 8 33 சதம் சட்டமாக்க வேண்டுவதுடன், போனஸ் தொகைக்கு உச்சவரம்பு விதிக்கவேண்டாம் என்றும் போனஸ் தொகையை சேவிங்ஸ் பத்திரங்களாக வழங்க ஆலோசிப்பதையும் கைவிட வேண்டுமாறு மாநாடு கேட்டுக்கொள்கிறது.

### தலைவர்களை விடுதலை செய்

மேற்கு வங்கத் தொழிலாளர், விவசாயிகள், அரசு ஊழியர்கள், மாணவர்கள்போன்று போராடும் ஜனநாயக இயக்கங்களை ஒடுக்கும் வகையில் மத்திய அரசு தான் நேரடியான ஆட்சியின் கீழ் கண்மூடித்தனமாக கட்டவிழ்த்துவிடப் பட்டுள்ள ராணுவ சர்வாதிகார பாசிஸ அடக்குமுறை கொடுமையைக் கண்டித்தும் மத்திய போலீஸ் ராணுவத்தையும் நிபந்தனையின்றி வாபஸ் பெறக் கோருவதுடன், கைது செய்யப்பட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்கள் அனைவரையும் விடுதலை செய்ய மாநாடு வற்புறுத்தி கோருகிறது.

### ஆயுதம் கொடுக்கவும்

தங்களுடைய விடுதலைக்காக போராடிக் கொண்டிருக்கும் கிழக்கு வங்க மக்களின் அரசை அங்கீகரிக்கும் படியும், அவர்களுக்கு ஆயுதம் கொடுக்க வேண்டுமென்றும் மாநாடு இந்திய அரசை வற்புறுத்தியது

பழமை மிகுந்த கைநெசவுத் தொழிலை அழிப்பதற்கு விசைத்தறியை புகுத்தும் தமிழகசர்க்கார் கொள்கையை கண்டித்தும் கைத்தறி நெசவாளர்களுக்கு சட்டப்பாதுகாப்பு குறைந்த பட்ச சம்பள நிர்ணயம்,கைத்தறிக்கு சில ரகங்கள் ஒதுக்குவது,நூல்,சாயம் பட்டு போன்ற கச்சாப்பொருள்களை

(4-ம் பக்கம் பார்க்க)

---

# அரசு நிலங்களை ஒப்படைக்க அரசு ஊழியர்களுக்கு தாக்கீது

## ஏழைகளுக்கு தரநிலமில்லையாம்!

சென்னை, நவ. 15—

தங்களது பெயர்களிலோ அல்லது தங்களைச் சார்ந்திருப்பவர்களின் பெயர்களிலோ அரசாங்க நிலங்களைப் பெற்றிருந்தால், அந்த நிலங்களை அரசிடம் திருப்பி ஒப்படைத்து விடுமாறு அனைத்து அரசு ஊழியர்களுக்கும் தமிழக அரசு வேண்டுகோள் விடுத்திருப்பதாகத் தெரிகிறது.

மாவட்டக் கலெக்டர்களுக்கு இதுபற்றிய அறிவிப்பு அனுப்பப்பட்டுள்ளது அரசு நிலங்களை ஒருமாத காலத்திற்குள் ஒப்படைத்துவிடவேண்டுமாம்.

ஆயிரக்கணக்கான நிலமற்ற ஏழைகள் மாநிலத்தில் இருப்பதாகவும்— பங்கிட வேண்டிய நிலமோ குறைவாக இருப்பதாகவும்— அதனால் அரசு ஊழியர்களிடமுள்ள நிலங்களைத் திரும்பப்பெற அரசு கருதுவதாகவும் கூறப்படுகிறது.

அநேக பஞ்சாயத்து யூனியன்களின் நிலங்கள், நிலமில்லாத ஏழைகளுக்கு அளிக்கப்படாமல் யூனியன் ஊழியர்களுக்கு ஜாரி செய்யப்பட்டதாக அசெம்பிளியில் புகார் கூறப்பட்டதாம். அதன்பேரில் தான் இந்த நடவடிக்கையாம்.

### பெரு முதலைகளை விட்டு வைப்பது ஏன்?

உச்சவரம்புச் சட்டத்தின் ஓட்டைகளுக்குள் புகுந்து லட்சக்கணக்கான ஏக்கர்களை பல பெயர்களாலே பட்டா போட்டுக் கொண்ட மிராசுதார்களிடமிருந்தோ — கோவில்களுக்குச்சொந்தமான லட்சக்கணக்கான ஏக்கர் நிலங்களை பல பெரிய தனக்காரர்கள் திருட்டுத்தனமாக வைத்திருக்கிறார்கள் என்று அறநிலைய மந்திரி கண்ணப்பன் அவர்கள் கூறினாரே, அந்த திருட்டுக் கும்பலிடமிருந்தோ-எப்பொழுது பிடித்து, என்றைக்கு ஏழைகளுக்கு பங்கிடப் போகிறார்கள்? மற்றும் கோவில, மட நிலங்களையும் எப்பொழுது பங்கிடுவார்கள்?

---

## சுவரண் சிங்கிற்கு சீனவெளி உறவு அமைச்சர் செய்தி

நியூ டெல்லி, நவ 16—

மக்கள் சீனத்தின் வெளி உறவு மந்திரி செ—பெங்—பீ. நம்நாட்டு வெளி உறவு மந்திரி சுவரண் சிங்கிற்கு செய்தி அனுப்பியுள்ளார். மக்கள் சீனம் ஐ. நா. வில் இடம் பெற்றது குறித்து சுவரண் சிங் அனுப்பிய வாழ்த்துக்கு பதில் இந்த நன்றிக் கடிதத்தை அனுப்பியுள்ளார்.

அக்கடிதத்தில், மக்கள் சீனம் ஐ நா. வில் இடம் பெற்றமை குறித்து, தாங்கள், தங்கள் நல்லாதரவை ஈந்தமைக்கும்; மக்கள் சீனம் அதன் உரிய இடத்தைப் பெறுவதற்கும், தைவானை வெளியேற்றுவதற்கும் ஆதரவளித்ததற்காகவும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன் என்று அச் செய்தியில் குறிப்பிடப் பட்டிருந்தது.

---

## ஐ. நா. வில் சீன பிரதிநிதிகள்

ஐ நா நவ, 16—

ஐ. நா. சபை மக்கள் சீனத்தை அங்கீகரித்த பிறகு நேற்று சீனப் பிரதிநிதி தோழர் சியோ-கான்-ஹுவா ஐ நா சபையில் தனது இடத்தில் அமர்ந்தார்.

அவருடன், மேலும் ஐந்து பிரதிநிதிகளும் வந்திருந்தனர். அவர்களில் தூதுவர் தோழர் ஹுங்-ஹுவாவும் ஒருவர். பிரதிநிதிகள் குழுவில் ஒரு பெண்உறுப்பினரும் இருந்தார்

சீனப் பிரதிநிதிகள் சபையில் உட்கார்ந்த உடனேயே பலத்த ஆரவாரம் எழுந்தது. சிறிது நேரம் மற்ற நாட்டுப் பிரதிநிதிகளுடன் கைகுலுக்குவதிலும், போட்டோ எடுப்பதிலும் கழிந்தது. மக்கள் சீனத்தை ஐ. நா. சபை அங்கீகரித்து மூன்று வாரங்கள் ஆகின்றன.

---

## பொருட்காட்சி வைப்பதில் தி மு.க.வில் பிளவு

மணப்பாறை, நவ 15—

மணப்பாறையில்நடைபெற விருக்கும் பொருட்காட்சிக்கு நகராட்சி மூலம் அனுமதி வழங்க வேண்டும் என்று ஒரு பகுதி தி. மு க. தலைவர்கள் கருதுகிறார்கள்.

நகராட்சியோ, சம்பந்தப்பட்ட அதிகாரியோ. பொருட்காட்சிக்கு அனுமதி வழங்கக் கூடாது என்று எம். ஜி. ஆர். மன்றமும் தி மு. க. செயற்குழுவும் கூடி தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

இந்த இரண்டு பிளவுகள் இப்படி இருக்கும் போது, மூன்றாவது பிளவும் முளைத்திருக்கிறது. அதாவது, தி மு க. தொழிற்சங்கப் பிரமுகர் என். வடிவேலனும், எம் ஜி ஆர். மன்ற ரசிகர்கள் பலரும், "நம்ம ஊருக்கு பொருட்காட்சியே வேண்டாம்"— என்று கூறி, மக்களிடம் கையெழுத்து வாங்கி மகஜர் தயாரித்து திருச்சி மாவட்ட கலெக்டருக்கும் முதலமைச்சருக்கு அனுப்பியுள்ளார்களாம்.

ஆனால் தி.மு க நகரசபை, இந்த எதிர்ப்புகளை லட்சியம் செய்யப் போவதில்லை யென்றும். பொருட்காட்சி நடத்த அனுமதி கொடுத்தே தீரும் என்றும் தெரிகிறது.

---

## திருச்சி இந்திரா காங்கிரஸ் கட்சியில் குத்துவெட்டு

திருச்சி, நவ. 16—

திருச்சி நகராட்சித் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் படுதோல்வியடைந்ததையொட்டி ஏற்பட்டுள்ள கோஷ்டி சண்டை இன்னும் ஓயவில்லை. மாவட்ட இந்திரா காங்கிரசை கலைத்துவிட்டு புதியகமிட்டியை பழனியாண்டியின் தலைமையில் மீண்டும் அமைத்துள்ளதை எதிர்த்து நகர இந்திரா காங்கிரஸ் செயலாளர் எஸ். பெரியண்ணன் ராஜினாமா செய்து விட்டார்.

திருச்சி நகரத்தில் உள்ள இந்திரா கட்சியில் பதவிச் சண்டை ஏற்பட்டு கட்சியே கலகலத்துப்போய் இருக்கிறது. இந்திரா கட்சியின் பெருந்தலைவர்களில் ஒருவரான ஏ. பி. சி. வீரபாகு திருச்சிமாவட்டகட்சியின் கமிட்டியை கலைத்துவிட்டு எம். பழனியாண்டிஎன்பவரின் தலைமையில் புது கமிட்டியை நியமித்திருக்கிறார்.

புதுக்கமிட்டியை நியமித்த பின்பும் திருச்சி நகர இந்திரா கட்சியின் உட்பூசல் நிற்பதாக இல்லை நகரஇந்திராகாங்கிரஸ் செயலாளர் எஸ் பெரியண்ணன் மாவட்டக்கமிட்டி தலைவராக மீண்டும் பழனியாண்டியை நியமித்ததை கடுமையாகத் தாக்கி அறிக்கை ஒன்றை வெளியிட்டிருக்கிறார்.

அதில் கூறியிருப்பதாவது:-

திருச்சியில் சமீபத்தில் நடந்த நகரசபைத் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் பரிதாப தோல்வியுற்றதற்கு இப்போதைய கமிட்டித் தலைவர் பழனியாண்டியும், திருச்சிநகர இந்திரா காங்கிரஸ் தலைவர் எம். வி. எல். நரசிம்மனுமே முழுக் காரணம் என்றும் குற்றம்சாட்டியிருக்கிறார்.

போட்டியிட்ட 6 வார்டுகளிலும் கட்சி படுதோல்வியடைந்ததை குறிப்பிட்டுள்ளார்.

பழனியாண்டியின் தலைமைக்கு இந்திரா காங்கிரசின் ஊழியர்கள் மத்தியில் கடும் எதிர்ப்பு இருந்தது என்றும், பல மாதங்களாக மாவட்டக் கமிட்டி கூட்டப்படவே இல்லை என்றும், அப்படிக் கூட்டப்பட்டிருந்தால்,அவரது தலைமைக்கு எதிராக பெரும் போராட்டமே எழுந்திருக்கும் என்றும் தெரிவித்திருந்தார். அதோடு அவரின்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவந்திருப்பார்கள் என்றும் குறிப்பிட்டிருந்தார்.

எனவே, பழனியாண்டியையே மீண்டும், மாவட்டக் கமிட்டியின் தலைவராக தேர்ந்தெடுத்ததை தான் எதிர்த்து, தன் செயலாளர் பதவியை ராஜினாமா செய்வதாக அந்த அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

---

## கன்னியா ஸ்திரிகள் கடத்தல்!

### லண்டன் புத்தகம் தகவல்

லண்டன் நவ 15—

கேரளத்திலிருந்து ஏழைப் பெண்களை விலைக்கு வாங்கி கிறித்தவ கன்னியர்களாக வெளிநாட்டுக்கு இங்குள்ள பாதிரியார் அனுப்பி வைத்ததும், அதனால் இந்தியா முழுவதும் பெரும கொந்தளிப்பு ஏற்பட்டதும் தெரிந்ததே.

இது பற்றி, அந்தக்கன்னியர்களுக்கு இத்தாலிய மொழி கற்றுக் கொடுப்பதற்காக அமர்த்தப்பட்ட ஆசிரியை திருமதி டக்ளஸ் மேலும் சில திடுக்கிடும் தகவல்களைத் தெரிவித்துள்ளார்.

இந்தக் கன்னியர்களை அனுப்புவதற்காக இத்தாலிய மடங்களிலிருந்து முழு விமானக்கட்டணத்தை, கேரள பாதிரியார் வாங்கிக்கொள்கிறார். பின் இந்தக் கன்னியர்களை மாணவிகளுக்கான சலுகைக் கட்டணத்துடன் அனுப்பிவிடுகிறார்கள். இதன் மூலம் சுலபமாக இப்பாதிரியார்கள் பல லட்சம் ரூபாய் களைக் கொள்ளையடிக்கிறார்கள்

1960ம் ஆண்டிலிருந்து, இதுவரை சுமார் 2000 இளம் பெண்களை இவ்வாறு அனுப்பியுள்ளனர்.

இத்தாலியில் அடிமை வாழ்வு வாழ்ந்து கொண்டு, வீட்டு நினைவால் துடிக்கும் இப்பெண்களுக்காக, திருமதி டக்ளஸ் இந்தியா வந்து தகவல் திரட்டிக்கொண்டு, இப்பெண்களுக்கு ஆதரவாக தற்போது இத்தாலியில் பிரச்சாரம் செய்து வருகிறார்.

---

# சமூகத் திருடன் யார்?

உங்கள் பையிலிருந்து எவனாவது ஒருவன் பத்து ரூபாய் நோட்டை உங்களுக்குத் தெரியாமல் எடுத்துவிட்டால் அது திருட்டு. இந்தத் திருட்டிற்கு தக்க தண்டனை கொடுக்க சட்டத்தில் இடம் இருக்கிறது. இவனை சமூக விரோதி என்கிறோம். இவனுடைய செய்கையைக் கண்காணிக்க அரசாங்கம் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறது. ஆனால் இதே பத்து ரூபாயை வியாபாரி ஒருவன் விலைவாசி உயர்வு என்ற பேரால் நம்மை ஏமாற்றி நம்மிடமிருந்து பறித்துக் கொண்டால் அதற்கு வியாபாரத் தந்திரம் என்று கூறப்படுகிறது. விலைவாசியைத் தன்னிஷ்டம்போல் ஏற்றும் இவனைத் தண்டிக்கச் சட்டத்தின் நீதிக் கரங்கள் நீளுவதில்லை. இவனுடைய செய்கைகளைக் கண்காணிக்க அரசாங்கம் முழுப் பொறுப்பேற்றுக் கொள்வதில்லை. சமூகத்திலுள்ள இந்தத் திருடர்களைத் தண்டிப்போர் யார்? இந்த சமூகத் திருடர்கள் திருந்துவது எப்போது?

பையிலிருந்து பணத்தை எடுத்தவனிடமிருந்து பணத்தை பெற்று நம்மிடம் சேர்க்கும் பொறுப்பினை நம்முடைய அரசாங்கம் ஏற்றுக்கொண்டிருக்கிறது. ஆனால் சமூகத் திருடர்களான கொள்ளை லாபக்காரர்கள் கட்டுக்கடங்கா விலைவாசி உயர்வின் மூலம் நம்மிடமிருந்து பறித்த பணத்தைப் பிடுங்கி நம்மிடம் திருப்பித் தரும் பொறுப்பினை எந்த அரசாங்கமும் ஏற்றுக்கொள்வதில்லையே? கொள்ளை லாபக்காரர்களிடமிருந்து பாதுகாப்பில்லாத ஜனநாயகமும், சோசலிஸமும் ஏழைகளையும் பாமரர்களையும் பொறுத்தவரை ஏட்டுச் சுரைக்காய் தான். விலைவாசி ஏற்றத்துடன் இணைந்த ஊதியம் ஊழியர்கட்கும் கிடைக்காதவரை இந்தசமூகத் திருடர்களிடமிருந்து அரசாங்க ஊழியர்கட்குப் பாதுகாப்புக் கிடையாது.

—"என். ஜி. ஓ. குரல்"
நவம்பர் 1971.

# கண்ணோட்டம்

# கூட்டுறவு குகைகளிலே குண்டோதரர் கும்மாளம்

நம்ம நாட்டிலே கூட்டுறவு சொஸைடிகளுக்கு கணக்கு வழக்கே இல்லை. வீடு கட்டும் கூட்டுறவு சொஸைடி...கடன் வழங்கும் கூட்டுறவு சொஸைடி...மார்க்கெட்டிங் கூட்டுறவு சொஸைடி...நுகர்வோர் கூட்டுறவுசொஸைடி...நெசவாளர் கூட்டுறவு சொஸைடி...சிறுதொழில் கூட்டுறவுசொஸைடி... கூட்டுறவு செய்தித்தாள்...விவசாயிகளிடமிருந்து நெல்லை வாங்கிக் கொண்டு, அவர்கள் உரம்வாங்க கடன்கொடுக்கும் கூட்டுறவு நாணயச்சங்கக் கூட்டுறவு சொஸைடி...இப்படி எத்தனையோ கூட்டுறவு சொஸைடிகள் நம்ம நாட்டிலே உண்டு. எல்லா சொஸைடிகளின் முகப்பிலேயும், "கூட்டுறவே நாட்டுயர்வு" என்று கொட்டை எழுத்துக்களில் அட்டை ஒட்டியிருப்பார்கள்.

கூட்டுறவு சொஸைடிகளின் எண்ணிக்கை அளவையும்—அவற்றிலே போடப்பட்டுள்ள பண அளவையும்—அவற்றுக்கு அரசு அளிக்கும் கடன் வசதிகளையும்—அவற்றை நிருவகிக்கும் பெரிய மனுஷர்களின் பேர் புகழையும் பெருந்திறமையையும் பார்க்கிறபோது...இந்தக் கூட்டுறவுகளால் எப்பவோ நாட்டுயர்வு ஏற்பட்டிருக்க வேண்டும் அல்லவா!...இப்படி நாம் பேசினால், 'என்னங்க திடீரென்று கூட்டுறவு மீது சந்தேகத்தைக் கிளப்பிவிட்டீர்கள்? அவைகளாலே மக்களுக்கு ஒரு நன்மையும் இல்லையா?"—என்று கேள்வி கேட்பாரும் உண்டு. கேட்க வேண்டியதுதான்.

கூட்டுறவினால் ஒரு பயனும் இல்லையென்று ஒட்டு மொத்தமாக அடித்துச்சொல்லவில்லை. ஏழை உறுப்பினர்களுக்கும் ஏதாவது ஓரளவு பயன் இருக்கத்தான் செய்யும் இல்லாமல் இருக்குமா?

ஆனால், ஒன்று கூட்டுறவே நாட்டுயர்வு என்றீர்களே! அது மெய்யானா? மெய்தான் என்றால்,

அன்றாடப் பத்திரிகைகளிலே, "கூட்டுறவு சங்கத்தில் மோசடி - 5 லட்சம் ரூபாய் கையாடல—சங்க முக்கியஸ்தர்கள் கைது"......என்று அடிக்கடி செய்திகள் வருகின்றனவே! அதெல்லாம் என்ன? உதாரணமாக, தூத்துக்குடி நகரிலே—நெல்லை மாவட்ட மொத்த விற்பனை கூட்டுறவு சங்கத்திலே ரூ 20 லட்சமோ,ரூ 25 லட்சமோ...எவ்வளவோ பணம் ஏப்பமாகி விட்டது என்றும்—அச்சங்கத்தின் தலைவரும் இந்திரா காங்கிரஸ் பிரமுகருமான ஏ.பி.சி. வீரபாகு பிள்ளைதான் இவ்வளவு பணத்தையும் விழுங்கி விட்டாரென்றும்—அவர் மீது விசாரணை நடத்த வேண்டுமென்றும், எவ்வளவோ நோட்டீஸ்கள் புள்ளி விபரத்தோடு, வெளியாயின; விசாரணை நடத்த வேண்டுமென்ற கோரிக்கையையும்வைத்து சென்ற ஆண்டு தொழிலாளர்களும் உண்ணாவிரதம் இருந்தனர். எத்தனையோ பொதுக் கூட்டங்களிலும் பேசப்பட்டன. மந்திரிமார்களுக்கும் மகஜர்கள் போயின. என்ன ஆச்சு? எல்லாம் மணிஞ்சசு!...... அவ்வளவுதானே! இப்படி ஒரு புகாரா இரு புகாரா? எத்தனையோ புகார்கள! ஒவ்வொன்றும் எண்ணினால் ஒரு கோடி ஊழல் இருக்கும். ஊழல் பெருச்சாளிகளை இத்துடன் நிறுத்திக் கொள்வோம்.

கூட்டுறவு சங்கங்களை ஆட்டிப் படைப்பது யார்? அவற்றில ஆதாயம் அடைவது யார்? இதைப்பற்றி ஊரு உலகத்துக்கெல்லாம் நல்லாத் தெரியும்.

நூற்றுக்கு ஒன்றிரண்டு தவிர— ஏறக்குறைய எல்லா சங்கங்களிலும் ஆதிக்கம் வகிக்கக்கூடியவர்கள் பெரிய மனுஷர்கள் யார்? பஞ்சாயத்து சபைகளிலே, ஊரிலுள்ள உச்சி மனுஷர்களே புகுந்து கொள்வதைப்போல, கூட்டுறவிலும் உச்சி மனுஷர்கள்தான் புகுந்துகொண்டு மணியம் செய்கிறார்கள்.

இந்த மேட்டுக்குடி நிருவாகிகள், கூட்டுறவை யாருடைய நன்மைக்காகப் பயன்படுத்துகிறார்கள்? கிராமத்திலே கூலி விவசாயிகள் இருக்கிறார்கள்... ஏழை விவசாயிகள் இருக்கிறார்கள்... நடுத்தர விவசாயிகள் இருக்கிறார்கள்... பணக்கார விவசாயிகள் இருக்கிறார்கள்... நிலப் பிரபுக்கள் இருக்கிறார்கள்... நிலப் பிரபுக்களிலேயே குண்டோதர நிலப்பிரபுக்களும் உண்டு... இப்படி எத்தனையோ தட்டுகள்!... எத்தனையோ மட்டங்கள்...

இதிலே, இந்தக்கூட்டுறவு சங்க மேட்டுக்குடி நிருவாகிகள், எந்தத் தட்டு மக்கள் ஆதாயம்பெற கூட்டுறவுகளைப் பயன்படுத்துகிறார்கள்?.........

கூலி விவசாயிகளுக்கு ஒண்ணுமே இல்லை.........ஏழை விவசாயிகளுக்கு எதுவுமே இல்லை......... நடுத்தர விவசாயிகளுக்குக் கிடைப்பதே அரிது!...... ஆகவே, இந்த மூன்று தட்டுகளுக்கும் ஒண்ணும் கிடைக்காது; கிடைத்தாலும் தொட்டுக்கோ தொடச்சுக்கோனுதான் கிடைக்கும்.

ஆனால், மேல்தட்டு பணக்கார மிராசுதாரர்களுக்கும், குண்டோதர நிலப் பிரபுக்களுக்கும், கேட்கக் கேட்கக் கிடைக்கும். இல்லையென்ற சொல், இல்லவே இல்லை...

சுருக்கமாகச் சொன்னால், கூட்டுறவுச் சங்க ஆதிக்க வர்க்காரர்கள் சொத்துப் பத்துள்ள மேட்டுக்குடி மக்கள்! அவர்கள் கூட்டுறவுச் சோத்துப்பொட்டலத்துக்குள்ளே புகுந்து எவ்வளவு கொறிக்கவேண்டுமோ கொறிக்கிறார்கள்!

இப்படி நிருவாகிகளும் நிலப்பிரபுக்களும் கூட்டுறவு இயக்கத்தை கூடக்கொள்ளை இயக்கமாக நடத்திவருகிறார்கள்.

எங்காவது ஒரு நேர்மையான அதிகாரி, இந்த ஊழல் பெருச்சாளிகள் மீது நடவடிக்கை எடுத்தால், போச்சு... பேச்சு...ஊழல் பெருச்சாளிகளும் தொந்தி பெருச்சாளிகளும், மந்திரிக்குத் தந்தி அடித்துவிடுவார்கள்: தவலும் அனுப்பிவிடுவார்கள் அப்புறம்.

பாவம், உலகம் புரியாத அந்த அதிகாரி வேறு ஊருக்கு டிரான்ஸ்பர் ஆகிவிடுவார். இல்லாவிட்டால் அவரது தலைக்கு தண்ணீர் ஊற்றப்பட்டுவிடும்.

இவ்வளவும் பொதுவாகத்தானே பேசுகிறீர்கள்! குறிப்பாகச் சொல்ல வேண்டாமா?—என்று கேட்பீர்கள். நல்லது. அந்தக் குறிப்பையும் சொல்லுவோம்.

உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா? போன வருஷத்திலே—அதாவது, 1970 ஏப்ரல் 2-ம் தேதியிலே—தமிழக சட்ட மன்றத்திலே—கூட்டுறவுத்துறை மானிய விவாதம் நடந்தபோது, மார்க்சிஸ்ட் கட்சி உறுப்பினர் தோழர் வி. கே. கோதண்டராமனுக்கும், முதலமைச்சர் மு. கருணாநிதிக்குமிடையே ஒரு டமால் டுமால் நடந்ததே, நினைவிருக்கிறதா? அது அப்படியே 3—4—70 தினமணிப் பேப்பரிலே வந்தது. அதை அப்படியே தருகிறோம். படியுங்கள்:

"அடுத்து, வி. கே. கோதண்டராமன் பேசுகையில்: 'கூட்டுறவு இயக்கம் கட்டுக் கொள்ளையாகத்தான் இருக்கிறது. பல சங்கங்களில் பதவியில் இருந்தவர்கள் தவறிழைத்திருப்பதால், சாதாரண மக்களுக்கு அதன் மூலம் பலன் கிடைக்கவில்லை.

"மந்திரி என்ன சொன்னாலும் அப்படியே கேட்க வேண்டும் என்ற நிலை கூட்டுறவு இலாகாவில் இருக்கிறது.

நேர்மையான அதிகாரிகளைத் தூக்கி விடுகிறார்கள்" என்று கூறி, "அந்த கூட்டுறவு இலாகாவை அந்த அமைச்சரிடமிருந்து முதன் மந்திரியே எடுத்துக் கொள்ள வேண்டும். அந்த அமைச்சர் (ஆதித்தனார்) ராஜினாமாச் செய்துவிட வேண்டும்" என்று கோதண்டராமன் கூறினார்.

முதலமைச்சர் திரு கருணாநிதி (குறுக்கிட்டு): "இதுபற்றி கோதண்டராமனின் புத்திமதியைக் கேட்கத் தயாராயில்லை" என்றார்.

கோதண்டராமன்: "சட்டசபை மெம்பர் என்ற முறையில் கூறிக்கொள்கிறேன். காங்கிரஸ் ஆட்சிகாலத்தில் இப்படி சொன்னதைக் கேட்காததினால்தான், அவர்கள் இந்த கதிக்கு ஆளானார்கள். அந்தக் கதிக்கு நீங்களும் ஆளாகக்கூடாது என்பதினால்தான்..."

முதன் மந்திரி: "உங்கள் பேச்சைக் கேட்டு ஊரே உருப்படும். அந்தப்பேச்சைக் கேட்டு, இந்தியாவில் சில பகுதிகள் எப்படி உருப்பட்டிருக்கிறது என்பது எங்களுக்குத் தெரியும்" என்றார்.

அதற்கு கோதண்டராமன்: "இந்தியாவில் மட்டுமல்ல. உலகிலேயே இப்படிச் சொன்னவர்கள், என்ன ஆயிருக்கிறார்கள் என்பது எங்களுக்குத் தெரியும். சரித்திரம் படித்த உங்களுக்கும் தெரியும்" என்றார்.

வாக்குவாதம் எப்படி நடந்திருக்கிறது, பார்த்தீர்களா? தோழர் கோதண்டராமன் எந்த வர்க்கத்திற்காக வாதாடினார் என்பதையும், முதலமைச்சர் கருணாநிதி எந்த வர்க்கத்துக்காகப் பேசினார் என்பதையும் நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள். ஏழையின் சிரிப்பிலே இறைவனைக் கண்டே தீருவேன் என்று சபதமேற்றுள்ள முதலமைச்சர் அவர்கள் இப்படிப்பேசியது சரிதானா?.........

முதலமைச்சர் அவர்கள் அமெரிக்காவுக்குப் புறப்பட 3 நாட்களுக்கு முன்னதாக—அதாவது, 5-11-71-ல் சேலத்தில் அம்மாபேட்டை கைத்தறி நெசவாளர் வரவேற்பின் போது பேசுகையில், "கூட்டுத்துறையில் உள்ளவர்கள் மழையைப் பொழியும் மேகங்களைப்போல் இருக்கவேண்டும். காளான்களைப்போல் கிடைப்பதைப் பங்கு போட்டுக்கொள்ளக்கூடாது" என்று கூறினார்.

பேச்சு எவ்வளவு நல்லாயிருக்கு! இப்படிப் பேசுகிறவர், சட்டமன்றத்திலே ஏன், கோதண்டராமன் மீது எரிந்து விழுந்தார்? "விபரம் இருந்தால் கொடுங்கள், விசாரித்து நடவடிக்கை எடுக்கிறேன்" என்று தனுக்காகப்பேசி மழுப்ப வேண்டாமா? மழுப்புவதற்கும் அழகுத்தமிழில் அடுக்குச் சொல்லா இல்லை?

எங்கள் பாட்டாளித் தலைவன் கோதண்டராமன் சொன்னது அனுபவத்தில மட்டுமல்ல, ஆராய்ச்சியிலும் கூட முற்றிலும் சரி என்று நிருபிக்கப்பட்டிருக்கிறது. எப்படி என்று கேட்கிறீர்களா? படியுங்கள்!

கோவை இராமகிருஷ்ண மிஷன் வித்யாலயா கல்லூரி கிராமப்புற உயர் கல்வி ஆராய்ச்சியாளர்கள் ஒரு சர்வே செய்தார்கள். பேராசிரியர் ஓ. ஆர். கிருஷ்ணசாமியும் ஆர். ஏ. குருசாமி அவர்களும் இந்த சர்வேயைச் செய்தார்கள். அவர்கள் எந்த அரசியல்வாதியும் அல்லர். கல்விப் பணியிலேயே கருத்துள்ளவர்கள்.

அவர்களது சர்வேயில் என்ன கூறுகிறார்கள்? தினமலரில் வெளிவந்த 1—3—71ம் தேதிய கோவைச் செய்தியின் படி:

"பெரும் நிலப் பிரபுக்களே பஞ்சாயத்துகளையும் கூட்டுறவு சங்கங்களையும் ஆட்டிப் படைக்கிறார்கள். 10 ஏக்கருக்கு மேற்பட்ட $50\frac{1}{4}$ சதவிகிதம் நிலச்சுவான்தார்கள் கூட்டுறவு சங்கங்களிலும— $42\frac{1}{2}$ சதவிகிதம் பஞ்சாயத்துகளிலும ஆதிக்கம் செய்கிறார்கள்.

"ஏழை விவசாயிகள் கூட்டுறவுகளிலே ஏறக்குறைய இல்லை"—என்று எடுத்துக்காட்டிவிட்டார்கள். அவர்கள் அத்துடன் நிறகவில்லை.

இந்த ஆதிக்கக்காரர்களால், ஏழைமக்களுக்கு ஏன் நன்மை ஏற்படவில்லை என்பதையும் எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். அதாவது;-

"ஆட்சி பீடத்திலும் நிலப்பிரபுக்களே பிரதிநிதித்துவம் வகிப்பதால், ஏழை விவசாயிகளுக்கு நியாயம் கிடைப்பதிலும் அனுகூலம் கிடைப்பதிலும தடங்கல் ஏற்படுகிறது. உடனே, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் தக்க மாறுதல்களைச் செய்யவேண்டும்"—என்று யோசனைகூறி முடித்திருக்கிறார்கள்.

இந்த யோசனையைத்தான் அனுபவத்தின் அடிப்படையில் தோழர் வி. கே. கோதண்டராமன், முதலமைச்சருக்கு எடுத்துக்கூறினார்.

அதற்காக, எல்லாம்தெரிந்த ஏகாம்பர முதலியார், பனங்கொட்டையைப் பிடித்துக்கொண்டு கரடி முட்டை என்று சொன்னதுபோல...... கோதண்டராமனைப் பார்த்து, "உங்கள் புத்திமதியைக்கேட்கத் தயாராயில்லை. உங்கள் பேச்சைக்கேட்டால் ஊரு உருப்பட்டது மாதிரிதான்"—என்று சொல்லிவிட்டார். இப்ப பேராசிரியர்களின் ஆராய்ச்சி என்ன சொல்லுது?

கருணாநிதியார் குறிப்பிடும் மேகம் "தொந்தி தொப்பையர்களுக்குத்தான் மழையாகப் பொழியவேண்டுமென்று விரும்புகிறாரா? அவர் குறிப்பிடும் "ஊரும்" மேட்டுக்குடி குண்டோதரர்கள்தானா?

—ஐ. மா. பா.

## இந்திராகாங்கிரசில்நக்சல்பாரிகள்!

மேற்கு வங்கத்தில் உள்ள நக்சல்பாரிகளில் பெரும்பாலானவர்கள் முன்பு கொலை, கொள்ளை வழக்கில் சம்பந்தப்பட்ட கிரிமினல் பேர்வழிகள் என்ற விஷயத்தை சில மாதங்களுக்கு முன்பாக போலீஸ் உயர் அதிகாரிகள் அறிவித்தார்கள்.

நக்சல்பாரிகள் நடத்துகின்ற அராஜகச் செயல்களுக்கு போலீஸ், ஆளும் கட்சி ஆகியோரின் துணையும் உண்டு என்று பத்திரிகைகள் கூறுகின்றன.

"வங்காளத்தில் நக்சலிஸம் தகருகிறது" என்ற தலைப்பில் கேரளத்திலிருந்து வெளியாகும் பிரபல மலையாள பத்திரிகையான "மலையாள மனோரமா"வின்நவ, 9ந் தேதி இதழில் ஒரு கட்டுரை வெளியானது. அதில்

"...........பிர்பாம் போலீஸ் ஸ்டேஷனில் சமீபத்தில் 24 நக்சல்பாரிகள் சரண் அடைந்தார்கள். போலீசாரின் பிடியிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக பல நக்சலைட்டுகள் ஆளும் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்துள்ளார்கள்........." என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

—மலையாள மனோரமா, நவ-9

# இந்திரா ஆட்சியில் விவசாயிகள் நிலை

பஞ்சாப் பல்கலைக் கழகமும், ஆந்திரா பல்கலைக் கழகமும், கிராமப் புறங்களில் விவசாயிகளின் நிலைபற்றி ஆராய்ச்சி செய்து, அதன் அறிக்கை "எக்னாமிக் டைம்ஸ்" அக்டோபர் 16-ம் நாள் இதழில் வெளியாகியுள்ளது. அது பசுமைப் புரட்சியின் லட்சணத்தை வெட்ட வெளிச்சமாக்கியுள்ளது. அதன் விபரமாவது:—

பசுமைப் புரட்சியினால் நிலம்படைத்த அனைவரும் பலன் அடைந்துள்ளார்கள் என்ற நிலை ஆராய்ச்சி செய்த இடத்தில் இல்லை என்கிறது சர்வே.

நிலம் வைத்துள்ள 100 பேருக்கு, 83 பேர் வறுமை நிலைக்கு கீழான நிலையிலோ அல்லது வறுமை நிலையிலோ இருக்கின்றனர். நூற்றுக்குப் பதினாறு நபரே நல்ல நிலையில் உள்ளனர் என்கிறது சர்வே.

நிலம் உள்ள விவசாயிகளை மட்டுமே ஆராய்ந்து கணக்கில் எடுத்துள்ளது சர்வே. நிலமற்ற விவசாயிகளையும் கணக்கில் அந்த சர்வே எடுத்துக்கொண்டால், நூற்றுக்கு 83 பேர் பஞ்ச நிலையில் உள்ளனர் என்பது மேலும் அதிகரிக்கும். பசுமைப் புரட்சியில் பிரதான பங்குவகிக்கும் ஹரியானாவின் கதி இது.

ஆராச்சிக்குழு நிலமுள்ளவர்களின் பகுதியை கீழ்க்கண்டவாறு பிரிவினை செய்துள்ளது.

### 5 ஏக்கருக்கு கீழ் நிலம் வைத்திருப்பவர்கள்

நூற்றுக்கு 28 குடும்பங்கள் 5 ஏக்கருக்கு கீழ் நிலம் வைத்திருக்கிறார்கள். மாகாணத்தில் உள்ள சாகுபடிக்கான மொத்த நிலத்தில் நூற்றுக்கு $7\frac{1}{2}$ பங்கு நிலம் இவர்கள் கையில் உள்ளது. இவர்களின் மூன்றில் இரண்டு பங்கு வருமானம் நிலத்திலிருந்தும், மீதி வருமானம் பால் விற்பனை மூலமும் கூலிவேலை செய்வதின் மூலமும் கிடைக்கின்றது. குடும்பத்திற்கு வருடவருமானம் ரூ 669 இவர்கள் தொடர்ச்சியான கடன் தொல்லையில் இருக்கின்றனர்.

### 5 ஏக்கருக்கு மேல் 10 ஏக்கர்வரை

நூற்றுக்கு 29 குடும்பங்கள் இந்தப் பிரிவைச் சார்ந்திருக்கின்றன. மொத்தம் மாநிலத்தில் உள்ள நிலத்தில் 100க்கு 21 பங்கு இவர்கள் கையில் உள்ளது. குடும்பத்திற்கு வருட வருமானம் ரூ 3834/- வருடபற்றாக்குறை ரூ 485/- வருமானம் நிலத்திலிருந்து கிடைப்பதுதான்.

### 10 ஏக்கருக்குமேல் 20 ஏக்கர்வரை

நூற்றுக்கு 27 குடும்பங்கள் இவ்வகையைச் சார்ந்தவை. மாநிலத்தில் உள்ள மொத்த நிலத்தில் 100க்கு 31 பங்கு இந்த பிரிவினர் வைத்திருக்கின்றனர். வருட வருமான குடும்பத்திற்கு ரூ 7036- ஒரு குடும்பத்திற்கு ரூ 441 மிஞ்சுகிறது.

### 20 ஏக்கருக்குமேல் 30 ஏக்கர்வரை

இந்த வகையில் 100க்கு 10 குடும்பங்கள் வருகிறது மொத்த நிலத்தில் 100க்கு 19 பங்கு இவர்களிடம் இருக்கிறது வருட வருமானம் குடும்பத்திற்கு ரூ 11 487- ஒரு குடும்பம் ஈடுபடுத்தும் முதலீடு ரூ 2185- ஒரு குடும்பத்தின் சேமிப்பு ரூ 766.

### 30 ஏக்கருக்கு மேல்

100க்கு 7 குடும்பங்கள் இந்த பிரிவின் கீழ்வருகின்றது. மொத்த நிலத்தில் இவர்களின் வருமானம், சேமிப்பு, முதலீடு ஏராளம் ஏராளம் ஏராளம்.

கடைசி இரண்டு பிரிவினர் ஆனாவது 20 ஏக்கருக்கு மேல் நிலம் வைத்திருப்பவர்கள் மேலும் மேலும் மூலதனம் போட்டு வளர நல்ல வாய்ப்பிருக்கிறது. நிலம் வைத்திருப்பவர்களின் எண்ணிக்கையில் 100க்கு 17 பகுதியினராகிய இவர்கள் மொத்த நிலத்தில் கிட்டத்தட்ட பாதி நிலத்தை தங்கள் கையிலே வைத்துள்ளனர். நிலச் சீர்திருத்த சட்டம் வந்தாலென்ன? அல்லது பசுமைப் புரட்சிதான் நிகழ்ந்தாலென்ன? இவர்களைத் தொட முடிந்ததா? இதுதான் இந்திராவின் சோஷலிஸம் போலும்!

### ஆந்திரா பல்கலைக் கழக ஆராய்ச்சி

அனகாபள்ளி, விசாகப்பட்டினம் விஜய நகரம் ஆகிய பிரதேசங்களின் 17 கிராமங்களை இந்தக் குழு சர்வேக்கு எடுத்துக் கொண்டுள்ளது.

நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களையும், சிறு விவசாயிகளையும் சர்வே செய்துள்ளது. 100 69 குடும்பங்கள் இந்த பிரிவில் உள்ளன.

தனிப்பட்ட தொழிலாளர்களுக்கு அதிக பட்சம் மூன்று மாதங்களே வேலை கிடைக்கிறது. விவசாயம் மற்றும் பிற வேலைகளையும் சேர்த்தாலும் ஒரு குடும்பத்திற்கு ஒட்டு மொத்தமாக 6 மாதத்திற்கு மேல் வேலை கிடைப்பதில்லை.

உழவு போன்ற கடுமையான வேலைக்கு ஆணுக்கு ஒரு நாள் கூலி ரூ 3. மற்ற வேலைகளுக்கு ரூ. 1-50லிருந்து 2-00 வரை கிடைக்கிறது. பெண்களுக்கு ரூ. 1-25லிருந்து 1-50 கிடைக்கிறது.

சிறு விவசாயிகளுக்கு ரூ 104 லிருந்து 173 வரை வருட வருமானம் சராசரி கிடைக்கிறது.

இந்தக் குறைந்த வருமானத்தை வைத்துக் கொண்டு எப்படித்தான் வாழ்கிறார்களோ? என்று தனதுவியப்பை வெளியிட்டுள்ளது ஆய்வுக் குழு.

இந்த மோசமான நிலைமை களைப்பற்றி காங்கிரஸ் ஆட்சியாளர்களுக்கு தெரியாதது கிடையாது. தெரிந்தும் கிராமத்திலுள்ள பணக்காரர்களின்சுரண்டல் அனுமதிப்பதோடு மட்டுமல்லாது தனது வளர்ச்சி நிதி அனைத்தையும் அவர்களுக்குத்தான் அளிக்கிறது. ஏழைகளுக்குக் கொடுப்பதில்லை. இது தான் இந்திரா காங்கிரஸின் சோஷலிஸ்ட் கொள்கை.

இது போன்ற கோடிக் கணக்கான ஏழை மக்கள் ஒன்று சேர்ந்து ஓர் மனிதனாக, வீறு கொண்டெழுந்து இந்த அநியாய அக்கிரமான சமுதாய அமைப்பை நொறுக்கும் நாள் வெகு தூரத்தில் இல்லை.

—எழிலன்.
தமிழாக்கம்

### கைது செய்யப்பட்ட

## சாலையோர வியாபாரிகள் விடுதலை செய்யப்பட்டனர்

மதுரை, நவ. 16 —

மதுரைமாநகரில் சாலையோரங்களில் வியாபாரம் செய்வதை, போக்குவரத்துப் போலீசார் அப்புறப்படுத்தியதையும் — அதை எதிர்த்து சாலையோர வியாபாரிகள் உண்ணாவிரதப் போராட்டம் நடத்தியதையும் — அவர்களில் 44 பேர்களைக் கைது செய்து, 7 நாள் மதுரைச் சிறையில் அடைத்ததையும் நேயர்கள் அறிவார்கள்.

ஒருவாரம் கழித்து, அந்த 44 பேர்களும் 15—11—71-ல் கோர்ட்டுக்கு கொண்டுவரப் பட்டார்கள். அவர்கள் அனைவரையும் மாஜிஸ்திரேட் எச்சரித்து விடுதலை செய்தார்.

சங்கத் தலைவர் ப. சுந்தரராஜன் அவர்களும் விடுதலை செய்யப்பட்டார்.

## என்குருமா சுகவீனம்

லிமா(பெரு) நவ. 17—

கானா நாட்டின் முன்னால் அதிபர் என்குருமா கடுமையான நோய்வாய்ப் பட்டிருப்பதாக கினியிலிருந்து வரும் அதிகாரபூர்வமான செய்திகள் கூறுகின்றன.

1966 பிப்ரவரியில் இராணுவச் சதி மூலம் என்குருமா பதவியிலிருந்து கவிழ்க்கப்பட்டதிலிருந்து கினியில் வசித்து வருகிறார்.

## தீக்கதிர் வளர்ச்சிநிதி

அகமதாபாத் தோழர். ஆறுமுகம் மூலம் ஒரு திருமணத்தின் போது அளிக்கப்பட்ட ரூ. 5—00 பெற்றுக்கொண்டோம். —நன்றி



## மதுரை—முகவை மாவட்ட......

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

விநியோகிக்க வேணடுமென்று மாநாடு கேட்டுகொண்டது.

கிழக்கு வங்க மக்கள் அரசை அங்கீகரிக்க மறுத்து விட்டு அகதிகள் பராமரிப்பு என்ற பெயரால் அவசரச்சட்டத்தின் மூலம் 70 கோடிக்கு புதிய வரிகள் போடப்பட்டுள்ளதை மாநாடு வன்மையாக கண்டிக்கிறது.

மதுரை-முகவை மாவட்டங்களிலுள்ள பவர்லூம் தொழிலாளர்களுக்கு பிராவிடன்ட் பண்ட், இ எஸ். ஐ போன்ற பாதுகாப்புகள் கொடுக்க வேண்டுமென்றும் குறைந்த பட்ச சம்பள குழுவின் முடிவுகள் துரிதப்படுத்த வேண்டுமென்று மாநாடு கேட்டுக் கொண்டுள்ளது.

மதுரை—முகவை மாவட்டங்களில் நகரங்களிலும் நகரப் பஞ்சாயத்துகளிலும் நியாயவிலைக் கடை திறக்க வேண்டுமென்றும் படியரிசி ரூ 1—36 க்கு வழங்க வேண்டுமென்றும் மாநாடு கேட்டுக் கொண்டுள்ளது.

சாத்தூர் நகராட்சியில் பல்வேறு ஊழல்கள்புரிந்துகொண்டிருக்கும் தனி அதிகாரியை மாற்ற வேண்டுமென்று இம் மாநாடு கேட்டுக்கொண்டுள்ளது.

மாநாட்டின் இறுதியில், குறுகிய அவகாசத்தில் மாநாட்டை வெகு சிறப்பாக நடத்திக் கொடுத்த பெரியகுளம் உத்தமபாளையம் தாலுகா கமிட்டிக்கும், தேனியிலும், தேனியை சுற்றியுள்ள கிளை தோழர்களின் பெரும் முயற்சிக்கும் மாநாட்டின் சார்பாக தோழர் ஏ. பி. பழனிச்சாமி நன்றி கூறினார்.

## சிறுநாடுகளுக்கு...

(1-ஆம் பக்கத் தொடர்ச்சி)

அக்கிரமங்களையும் எதிர்த்து வரும் ஆப்பிரிக்க மக்களின் போராட்டம் புனிதமானது, ஆகையால் அது நிச்சயம் வெற்றிபெறும் என்றார்.

சீன நாடு ஐ. நா.வை உருவாக்கிய நாடுகளில் ஒன்றாகும். நாங்கள் எங்கள் நாட்டில் ஆதிக்கம் புரிந்த சியாங்கேஷேக் கும்பலின் பிற்போக்கு ஆட்சியைத் தூக்கி எறிந்த பிறகு, நாங்கள் இயற்கையாகவே ஐ. நா.வில இடம் பெற்றிருக்க வேண்டும். ஆனால் அமெரிக்காவின் முரட்டுத்தனமான தடைகளின் காரணமாக, மக்கள் சீன குடியரசு இதுநாள் வரை ஐ. நா. வில் அதற்குரிய இடத்தைப் பெற முடியாமல் தடுக்கப்பட்டு வந்தது.

இந்தநிலைமைக்கு இன்று முடிவுகண்டு மக்கள் சீனம் அதற்கு உரித்தான இடத்தை இன்று பெற்றுள்ளது.

ஐ. நா.வில் தனக்குரித்தான இடத்தைப் பெற்றுள்ள மக்கள் சீனம் முறையாக தன் பங்கினை இந்த உலக நாடுகளின் சபையில வகிக்கும். நாங்கள் அணு குண்டுதயாரிப்பில் ஆரம்ப கட்டத்திலேயே இருக்கிறோம். இவைகளைத் தயாரிப்பதும் எங்களுடைய தற்காப்பிற்கே ஆகும். அணுகுண்டுதயாரித்து வைத்துக் கொண்டிருக்கும் ஏகபோகத்தை முறியடிப்பதற்கேயாகும்.

அதேசமயத்தில் அணுகுண்டு தயாரித்துள்ள நாடுகளெல்லாம் சேர்ந்து கொண்டு அணுகுண்டு இல்லாத நாடுகள் மீது யாரும் இனிமேல் அணுகுண்டு தயாரிக்கக்கூடாது என்ற கட்டுப்பாட்டைத் திணிப்பதற்காக நடக்கும் பேச்சுவார்த்தையில் நாங்கள் ஒரு நாளும் கலந்து கொள்ள மாட்டோம் என்று சீனத்தின் பிரதிநிதி தன்னுடைய முதல் கொள்கை முழக்கத்தில் அறிவித்தார்.

சீனப் பிரதிநிதி வெளியிட்ட ஒவ்வொரு அறிவிப்பிற்குப் பின்னும் ஐ. நா சபையே அதிரும் வண்ணம் பெரும்பாலான நாடுகளின் பிரதிநிதிகள் கரகோஷம் செய்து வரவேற்றனர்.

### இந்தியப்பிரதிநிதியின் வரவேற்புரை

ஐ.நா.வில் உள்ள நிரந்தரப் பிரதிநிதி சமர் சென், சீனாவை வரவேற்றுப் பேசிய ஏனைய 54 நாடுகளுடன் சேர்ந்து நின்று சீனத்துடன் இந்தியா தன்னுடைய உறவை முறைப்படுத்திக் கொள்ளவே விரும்புகிறது என்று அறிவித்தார்.

இந்தியப் பிரதமரின் வாழ்த்துக்கு சீனப் பிரதமர் அனுப்பிய பதிலுரையைக் குறிப்பிட்டு இத்தகைய நல்லுறவு மேலும் மேலும் வளருவதை விரும்புவதாகக் குறிப்பிட்டு இத்தகைய நல்லுறவு மேலும் மேலும் வளருவதையே இந்தியாவிரும்புவதாகத் தெரிவித்தார்.

மக்கள் சீனம் ஐ. நா.வில் இடம் பெறவேண்டும் என்ற கோரிக்கையை எழுப்பியது, இந்தியாதான் என்றும் அதே போல் பாண்டுங் மாநாட்டில் (இந்தோனேசியாவில் நடந்த ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் மாநாட்டில்) இந்தியாவுடன் சேர்ந்து நின்று சமாதான சகவாழ்வுக்காக ஐந்து பெரும் கொள்கைகளை(பஞ்சசீலத்தை) சீனாவுடன்சேர்ந்து பிரகடனப்படுத்தியது இந்தியாதான் என்று குறிப்பிட்டார். இன்று மக்கள் சீனம் ஐ. நா. பங்கு கொள்ள வந்தபிறகு உலகத்திலுள்ள முக்கியமான பிரச்சினைகளை தீர்ப்பதற்கு நல்ல வழி பிறந்திருக்கிறது என்று குறிப்பிட்டார்.

சீனா இன்று ஐ. நா.சபையில் அமர்ந்துள்ள இடம் முன்பு கியாங்கேஷேக் உட்கார்ந்திருந்த நாற்காலியல்ல." அந்த பெயர் முதலெழுத்து வரிசையில் அதற்கு இடம் ஒதுக்கப்பட்டுள்ளது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13 முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை—1.) அச்சிட்டு, வெளியிடுபவர் ஆசிரியர்: தே முத்தையா.